மாலை 46 மணி 12 டிசம்பர் 2004 விலை ரூ.10



# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை வெளியீடு

திருவரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி

பழநியில் மாண்புமிகு
முதலமைச்சர் அவர்கள்...

எம்பெருமான்
எனும்...
- ஏ.எம்.ஆர்.

விரத மகிமை
- பாலகுமாரன்

மார்கழி நோன்பு ...
- நிறைமதி

ருள் வழங்கும்
நாமக்கல் ...

# கனவு நினைவாகும்.
# வாழ்வு வளமாகும்.



வீட்டுக்கடன் திட்டம்




வாகனக் கடன் திட்டம்



கல்விக் கடன் திட்டம்




சொர்ண ஆபரண நகைத் திட்டம்

**வளமான வருங்காலம், வசதியான திட்டங்கள்.**
**வாருங்கள் இந்தியன் வங்கிக்கு.**

**Call : 9628 196 296**

மேலும் விபரங்களுக்கு, அருகிலுள்ள எங்களது கிளையைத் தொடர்பு கொள்ளவும்.



**இந்தியன் வங்கி**
(ஒரு இந்திய அரசு நிறுவனம்)

**தலைமை அலுவலகம் : 66, ராஜாஜி சாலை, சென்னை - 600 001.**
**ஈ.மெயில் :** indbank@vsnl.com **தகவல் தளம் :** www.indian-bank.com

**சீரிய வளர்ச்சிக்கு சிறப்பான முயற்சி மற்றும் மேன்மையை நோக்கி**





# திருக்கோயில்

திருவள்ளுவர் ஆண்டு 2035 தாரண - மார்கழி
மாலை-46 மணி -12 டிசம்பர் 2004

# அன்பார்ந்த வாசகப் பெருமக்களே!

வணக்கம்.

46 ஆண்டுகளுக்குப் பிறகு முதன்முதலாகத் "திருக்கோயில்" இதழுக்குத் தீபாவளி மலர் வெளியிட்ட மகத்தான சாதனையை வாசகர்கள் மனம்திறந்து பாராட்டியுள்ளீர்கள்.

ஆங்கில நாளேடுகளும், தமிழ்நாளேடுகளும் **"குறைந்த விலைக்குக் கிடைத்த மிகச் சிறந்த மலர்"** எனப் பாராட்டுக்களைக் குவித்துள்ளன.

இந்த அரிய சாதனையை நிகழ்த்துவதற்கு ஊக்கம் அளித்த நம் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள், உறுதுணை புரிந்த வாசகர்கள், வணிகநிறுவனங்கள், தமிழ்ச் சான்றோர்கள், அறநிலையத்துறை அலுவலர்கள் அனைவருக்கும் இவ்வெற்றிச் சாதனைக்காக என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்கி மகிழ்கின்றேன்.

மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள் பழநியில் தொடங்கிவைத்த கம்பிவட ஊர்தி, முதுமலையில் தொடங்கியுள்ள யானைகள் நலவாழ்வு முகாம், திருவல்லிக்கேணி அருள்மிகு பார்த்தசாரதித் திருக்கோயில் திருத்தேர் வெள்ளோட்டம் எனப்பற்பல அறநிலையத்துறையின் அரும்பணிகளும் இம்மாதத்தில் நிகழ்வுற்று என் உள்ளத்தை மகிழ்ச்சியில் திளைக்கச் செய்துள்ளது.

மகத்தான மங்கள மார்கழித் திங்களில் பூக்கும் **"திருக்கோயில்"** இதழிலும் தான் எத்தனை எத்தனை அரிய கட்டுரைகள்!

எம்பெருமானார் இராமாநுஜர் வாழ்ந்திருந்த காலகட்டத்திற்கே நம்மை அழைத்துக் கொண்டு சென்றுவிடும் ஏ. எம். ஆர். அவர்கள் இராமாநுஜரின் தாமுகந்த திருமேனி, தமருகந்த திருமேனி, தாமான திருமேனி தரிசனத்தை நமக்குச் சிறப்புற இவ்விதழில் விளக்கியுள்ளார் .

எழுத்துச்சித்தர் பாலகுமாரன் அவர்கள் தம்முடைய **'விரதமகிமை'** கட்டுரையில் நல்லபடியாய் விரதம் இருப்பது எப்படி? அதன் லாபம் என்ன? என்பனவற்றையெல்லாம் இனிதே விளக்குகிறார்.

இக்கட்டுரைகளோடு 'திருவரங்கத்தில் வைகுண்ட ஏகாதசித் திருவிழா', 'அருள்வாரி வழங்கும் நாமக்கல் ஸ்ரீ ஆஞ்சநேயர்' என அரிய பல கட்டுரைகள் இவ்விதழை அலங்கரிக்கின்றன. இத்தனைச் சிறப்புகளோடு மலர்ந்து மணம் வீசும் **திருக்கோயில்** டிசம்பர் மலரை யாவரும் வரவேற்று மகிழ்வது திண்ணமாகும்.

அன்புள்ள

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119 உத்தமர் காந்தி சிலை,
சென்னை - 600 034.

**ஜி. இராமகிருஷ்ணன்** இ. ஆ. ப.,
ஆணையாளர்,

## இதழின் உள்ளே...

# பழநியில் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் 3.11.2004 ல் தொடங்கி வைத்த கம்பிவட ஊர்தி (ரோப்கார்) நிகழ்ச்சிகள்











கம்பி வட ஊர்தியின் நீளம் 365 மீட்டர் ஆகும். இதில் மொத்தம் 20 பெட்டிகள் உள்ளன . $2\frac{3}{4}$ நிமிடத்தில் மலைக்கோவிலை அடையலாம். ஒரு மணி நேரத்திற்கு 800 பக்தர்கள் வரை பயணம் செய்யலாம். கம்பி வட ஊர்தி கட்டணமாக ஒரு வழிப் பயணம் செய்ய ரூ. 15ம், மேலே சென்று கீழே இறங்க ரூ. 25 ம் கட்டணம் ஆகும்.



# திருவரங்கத்தில் வைகுண்ட ஏகாதசித் திருவிழா

- எஸ். பராசர லட்சுமி நரசிம்ம பட்டர், ஸ்ரீரங்கம்

"குடதிசை முடியை வைத்து குணதிசை பாதம் நீட்டி
வட திசை பின்பு காட்டி தென்திசை இலங்கை நோக்கி"

கடல்நிறக்கடவுள் எந்தை அரங்கன், திருவரங்கத்தில் அரவணை மேல் பள்ளி கொண்டிருக்கும் அற்புத அழகு வர்ணிக்க யாராலும் இயலாது. ஏன், ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும் வர்ணிக்க இயலாத பேரழகு அன்றோ அரங்கனின் அழகு!

திருமடந்தை, மண்மடந்தை இருபாலும் திகழ வீற்றிருக்கும் அழகிய மணவாளன், புஷ்பஹாச சுகுமாரமான திருவடியுடன் பக்தர்கள் பரவசமடைய பல்வேறு உற்சவங்களைக் கண்டருளுகிறார். திருவரங்கப் பெருநகருள் பொன்னியாகிய காவிரி தன்திருக்கையால் அடிவருடப் பள்ளி கொண்டிருக்கும் அரங்கனுக்கு ஆண்டு முழுவதும் திருவிழாக்கள். இவருக்குத் திருவிழாக்கள் பல இருப்பினும், பல்வேறு வகையில் தனிச்சிறப்பு பெற்றது வைகுண்ட ஏகாதசித் திருநாள்.

டிசம்பர் மற்றும் ஜனவரி மாதங்களில் நடைபெறும் வைகுண்ட ஏகாதசித் திருவிழா மிகச் சிறப்பு வாய்ந்தது. 22 நாட்கள் நடைபெறும் இத்திருவிழா நாடெங்கிலுமிருந்து பக்தர்களைத் தன்பால் ஈர்க்கிறது. ப்க்தர்களைப் பக்திப் பரவசத்தில் ஆழ்த்தும் அற்புதத் திருவிழா வைகுண்ட ஏகாதசிப் பெருவிழா.

ஆழ்வார்கள் பதின்மரால் பாடப்பெற்ற நாலாயிர திவ்ய பிரபந்தப் பாசுரங்களை அரங்கன் செவிமடுக்கும் அற்புதத் தமிழ்த் திருவிழா. அரையர் திருவம்சத்தினர் ஆழ்வார்களது பாசுரங்களை அரங்கன் திருமுன்பு அபிநயத்துடனும், வியாக்யானத்துடனும், இசைத்தும் விண்ணப்பிக்கின்றனர்.

இத்திருநாள் திருஅத்யயன உத்ஸவம் என்றும், திருமொழித் திருநாள் (பகல்பத்து) திருவாய் மொழித்திருநாள் (இராப்பத்து) என்றும் மிகச் சிறப்பாக அழைக்கப்படுகிறது.

ஆழ்வார்களுக்காக ஏற்பட்ட திருவிழா இத்திருவிழா. அவர்கள் பாடிய தமிழ்ப் பாடல்களுக்காக ஏற்பட்ட இத்திருவிழாவில் இயல், இசை, நாடகம் என்ற முறையில் ஆழ்வார்களின் பாடல்கள் இங்கு மட்டுமே அற்புதமாக இசைக்கப்படுகின்றன.

**திருவிழா தோன்றிய வரலாறு :**

அரங்கனுக்குப் பாதுகாப்பு அரண் அமைத்து பல்வேறு மண்டபங்களைக் கட்டிய திருமங்கைமன்னன் எனப்படும் திருமங்கையாழ்வாருக்கு அரங்கன் நன்றாக வெகுமதி அளிக்க விரும்பத் தனக்கு எதுவும் வேண்டாமெனவும் நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழிப் பிரபந்தத்தை அரங்கன் செவிமடுக்க வேண்டும் எனக் கேட்டார். அன்றைய தினம் ஏற்பட்டது இத்திருவிழா. பின்னர் மற்றைய ஆழ்வார்களின் பாசுரங்களைக் கேட்க இருபத்தி இரண்டு நாட்களாக விழா விரிவாகக் கொண்டாடப்படுகிறது.

"ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே பரம்பொருள்" என்று விளக்கப்படும் அற்புதப் பாசுரங்கள் நிறைந்தது திருநெடுந்தாண்டகம்.

திருமங்கையாழ்வாரைக் கௌரவப்படுத்தும் விதமாக அவர் இயற்றிய திருநெடுந்தாண்டகப் பாசுரங்களுடன் தொடங்கும் இத்திருவிழா இயற்பா என்ற பிரபந்தத்துடன் முடிகிறது. திருநெடுந்தாண்டகத் திருநாளன்று இரவு மூலஸ்தானத்தில் அரையர் திருவம்சத்தினர் அரங்கன் திருவடிகளிலே நம்மாழ்வார், நாதமுனிகள் எனக் கூறப்படும் தாளங்களைச் சமர்ப்பித்து அரங்கன் உத்தரவு

பெற்று பாடல்களை மூலஸ்தானத்தில் இனிமையான இசையுடன் கைகளிலே தாள ஒலியுடன் இசைக்கின்றனர். பின்னர் சந்தன மண்டபத்தில் திருநெடுந்தாண்டகப் பாசுரங்களை குரல் வளத்துடன், ஒலி நயத்துடன் இசைக்கின்றனர். முதல் பாசுரத்திற்குத் தம்பிரான்படி என்றழைக்கப்படும் வியாக்யானத்துடன் விளக்கம் அளித்து, அழகாக நடன உருவில் அபிநயத்துடன் இசைத்துப் பின்னர் முழுவதுமாக பாசுரங்களைப் பாடுகின்றனர்.

**திருமொழித் திருநாள் :**

பகல்பத்து என்றும் அழைக்கப்படும் இத்திருநாள் 10 நாட்களுக்கு மிகவும் விமரிசையாக நடைபெறுகிறது. பகல்பத்து முதல் நாளன்று விடியற்காலை மூலஸ்தானத்தில் 'திருப்பல்லாண்டு' இசைக்கப்பட்டு தொடங்குகிறது இப்பெருவிழா. நம்பெருமாள் மூலஸ்தானத்திலிருந்து ஸ்ரீபாதம் தாங்குவோர் திருத்தோள்களிலே, குகையிலிருந்து புறப்படும் சிங்கம் போல் (சிம்மகதி) மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் பகல்பத்து மண்டபம் எனப்படும் அர்ஜுன மண்டபத்தில் திருமங்கையாழ்வார், விழா நாயகரான நம்மாழ்வார், அரங்கன் செல்வத்தைத் திருத்தி வைத்த உடையவர் எனப்படும் இராமானுஜர் ஆகியோர் அரங்கன் பின்தொடர மற்ற ஆழ்வார்கள் ஆச்சார்யர்கள் அர்ஜுன மண்டபத்தில் வீற்றிருக்க ஆழ்வார்கள் பாசுரங்களை அரங்கன் செவியுற்று, முகம் மலர்ந்து பக்தர்களுக்கு அர்ஜுன மண்டபத்தில் நாள் முழுவதும் அருள் பாலிக்கிறான். திருப்பல்லாண்டு பாசுரத்திற்கு அபிநயம், மற்றும் வியாக்யானம், பெரியாழ்வார் இயற்றிய பெரியாழ்வார் திருமொழியில் 190 பாசுரங்கள் அன்று அரையர் இசைக்கின்றனர்.



திருக்கைத்தல சேவை

இரண்டாம் நாளிலிருந்து பகல்பத்து 9ம் திருநாள் வரை அர்ஜுன மண்டபத்தில் பல்வேறு ஆடை அணிகலன்கள் அணிந்து அரங்கன் அழகாகக் காட்சியளிக்கிறார். இரண்டாம் திருநாளில் பெரியாழ்வார் திருமொழியில் 240 பாசுரங்களும்,

மூன்றாம் திருநாளில் 'சென்னியோங்கு' பாசுரம், அபிநயம், வியாக்யானம், அதில் 'திருப்பொலிந்த சேவடி' என்ற பாசுரம் வரை அபிநயித்து அரையர் சுவாமி திருக்கரங்களால் அரங்கனின் திருவடிகள் ஆழ்வார்கள் முதலாக பக்தர்கள் அனைவரின் தலைகளிலும் வைக்கப்பட்டு ஆசி வழங்கப்படுகிறது. பின்னர் ஆண்டாள் இயற்றிய 'மார்கழித் திங்கள்' பாசுரத்திற்கு அபிநயம். வியாக்யானம்



நம்மாழ்வார் மோட்சம்



இரத்தின அங்கியில் நம்பெருமாள்

இசைக்கப்பட்டு நாச்சியார் திருமொழி 120 பாசுரங்களும் சேவிக்கப்படுகின்றன.

பகல்பத்து நான்காம் திருநாளில் 'கண்ணன் எனும் கருந்தெய்வம்" மற்றும் 'இருளிரிய' என்று தொடங்கும் பாசுரங்களும், அபிநயத்துடனும், வியாக்யானத்துடனும் இசைக்கப்பட்டு குலசேகராழ்வார் இயற்றிய **பெருமாள் திருமொழி, திருமழிசையாழ்வார் இயற்றிய திருச்சந்தவிருத்தம்** ஆகிய பிரபந்தங்கள் இசைக்கப்படுகின்றன. 'கம்ச வதம்' என்ற நிகழ்ச்சியும் நடித்துக் காண்பிக்கப்படுகிறது.

ஐந்தாம் திருநாளில் "இச்சுவை தவிர யான் போய் இந்திர லோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்" என்று அரங்கனையே தஞ்சமாகப் பற்றிய தொண்டரடிப் பொடியாழ்வார் இயற்றிய 'திருமாலை'ப் பிரபந்தப் பாசுரங்கள் சேவிக்கப்பட்டு, அரங்கனுக்கு நடைபெறும் திருவாராதனக்ரமம் அரையர் சுவாமிகளால் நடித்துக் காண்பிக்கப்படுகிறது.

திருமாலை, திருப்பள்ளியெழுச்சிப் பாசுரங்களும்" கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணை உண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை அண்டர் கோன் அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று அரங்கனின் திருக்கமல பாதங்களில் ஐக்கியமடைந்த திருப்பாணாழ்வார் இயற்றிய 'அமலனாதிப் பிரான்' பாசுரங்கள் அபிநயத்துடன், வியாக்கியானத்துடன் சேவிக்கப்படுகின்றன.

ஆறாம் திருநாளில் ஆச்சார்யனின் பெருமையை உலகுக்கு உணர்த்திய மதுரகவியாழ்வாரின் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு"ப் பாசுரங்களுடன், பெரிய திருமொழியில் "வாடினேன் வாடிவருந்தினேன். பாசுரத்திற்கு அபிநயத்துடனும், வியாக்யானத்துடனும்



வேடுபறி

இசைக்கப்பட்டுப் பெரிய திருமொழியில் 250 பாசுரங்கள் சேவிக்கப்படுகின்றன.

ஏழாம் திருநாளில் 'தூவிரிய' என்ற பாசுரத்துடன் தொடங்கி அபிநயம், வியாக்யானத்துடன் பெரிய திருமொழியில் 210 பாசுரங்கள் சேவிக்கப்பட்டு, வாமனாவதார நிகழ்வுகள் நடித்துக் காண்பிக்கப்படுகின்றன.

எட்டாம் திருநாளில் 'பண்டை நான்மறை' என்ற பாசுரத்துடன் தொடங்கப்பட்டு அபிநய வியாக்யானத்துடன், பெரிய திருமொழி 250 பாசுரங்கள் இசைக்கப்பட்டு, அம்ருதமதனம் எனப்படும் பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதம் வழங்கிய நிகழ்ச்சி நடித்துக் காண்பிக்கப்படுகிறது.

ஒன்பதாம் திருநாளில் அரங்கன் முத்துக்களால் ஆனஅங்கியை அணிந்து முத்துக் கொண்டையுடன் முத்தார மேனியாக வீற்றிருக்க 'தொள்ளியீர்' என்ற பாசுரத்திற்கு அபிநயம், வியாக்யானத்துடன் பெரிய திருமொழி 200 பாசுரங்கள் சேவிக்கப்பட்டு 'முத்துக்குறி' நிகழ்ச்சி நடைபெறுகிறது. 'மின்னுருவாய்' என்ற பாசுரம் அபிநயத்துடன் வியாக்யானத்துடன் இசைக்கப்பட்டு, மிக அழகாக ஒன்பதாம் திருநாள் நிகழ்ச்சிகள் முடிவுறுகின்றன.

பகல்பத்து ஒன்பது நாட்களும் காலையில் சிம்மகதியில் மூலஸ்தானத்திலிருந்து எழுந்தருளும் நம்பெருமாள், ஒய்யார நடைகண்டு உயர்ந்த நிலையில் எல்லோரும் காணும்படியாக சேவை சாதித்து, துலுக்க நாச்சியாருக்கு சேவை தந்து, துலுக்க நாச்சியார் சன்னதியில் அரையர் இசையுடன் அழகாக ஆடி 'படியேற்ற சேவைகண்டு' அர்ச்சுன மண்டபத்தில் நாள் முழுவதும் பக்தர்களை தன் அருட்கண்களால் அருள்பாலித்து, இரவு பக்தர்களின் தட்டி உபயத்தை வண்ணமிகு மின் அலங்காரத்துடன் ஏற்று திருக்கருவூல அறை அருகில் ஒய்யார நடை நடந்து மேலப்படியில் தாசநம்பிகள் பச்சைக் கற்பூரத் துகள்களுடன் மலர் இதழ்களைத் தூவ, ஆபரணத்திற்கு அழகு கொடுக்கும் பெருமாள் என்றும், ஆழ்வார்கள் பதின்மர் பாடிய பெருமாள் என்றும் பல்வேறு கட்டியங்களை அரையர் தாளத்துடன் இசைக்க, ஸ்ரீபாதம் தாங்குவோர் தோள்களிலிருந்து திருக்கைகளிலே தோளுக்கினியான் அப்படியும் இப்படியும், ஒவ்வொரு படியாக ஆடி ஆடி படியேறும் அற்புதக்காட்சி நம்நெஞ்சை ஈர்க்கும்; பரவசப்படுத்தும்; கண்கள் ஆனந்தக் கண்ணீர் சொரியும்.

இவ்வாறு படியேற்றம் கண்ட பரந்தாமன் மீது யாரேனும் அரங்கன் அழகு கண்டு திருஷ்டி என்றழைக்கப்படும் கண் எச்சில் படாமல் பிரேமத்துடன் அரங்கனுக்குத் 'திருவந்திக்காப்பு' என்றழைக்கப்படும் குட ஆரத்தி எடுக்கப்பட்டு அரங்கன் அழகாக மெல்ல மெல்ல அசைந்து வளைந்து, நெளிந்து, புற்றுக்குள் நுழையும் பாம்பு போல் படம் எடுத்து மூலஸ்தானத்திற்குச் சர்ப்பகதியில் எழுந்தருளும் அற்புதக்காட்சி அரங்கனின் அதிசய நிகழ்ச்சி.

காலையில் சிம்மமாகப் புறப்பட்ட நம்பெருமாள் ஆழ்வார்களின் பாடல்களைச் செவியுற்று, மனம் மகிழ்ந்து ஒய்யாரமாக நடந்து, பக்தர்கள் வெள்ளத்தின் நடுவே சர்ப்பகதியில் உள்ளே எழுந்தருள, ஒன்பதாம் நாள் பகல்பத்து திருவிழா நிறைவுறும்.

**மோகினி அலங்காரம் :**

'மாரிமலை முழஞ்சில்' மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து வேரிமயிர் பொங்க எப்பாடும் போர்ந்துதறி மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுத்தினமும் சிம்மமாக எழுந்தருளும் நம்பெருமாள் அன்று அழகிய மோகினித் திருக்கோலத்திலே அதியற்புதமாக அழகியப் பெண்ணாகப் பட்டுப் போன்ற பாதங்களை மெல்ல அடியெடுத்து வைத்து அரங்கன், அரங்கநாயகியாக எழுந்தருளும் அற்புதத் திருக்கோலம் மோகினித் திருக்கோலம் ஆகும்.

வண்ணமய எழில் சேலை, நாகநடை, அழகிய வளையல்களைத் தன்னுள் அடக்கிய திருக்கைகள், அடுக்கு மாலைப்பதக்கங்கள், தோள்களைத் தழுவும் புற ஆபரணங்கள், திருக்காதுகளிலே தொங்கி விளையாடும் தொங்கட்டான்கள், மலர்க்குவியலிலே புதைந்து கிடக்கும் அற்புதத் திருவடிகள், அருள் அரங்கனின் நாயகித் திருவுருவம் நம் எண்ணங்களை, செயல்களை, வாக்கினை அரங்கனை விட்டு அகலாமல் இருக்கச் செய்யும்.

மீனமாய், ஆமையாய், பன்றியாய், நரசிங்கமாய், வாமனனாய், திருவிக்ரமனாய், பரசுராமனாய், தசரதராமனாய், பலராமனாய், கண்ணனாய் என்று பல்வேறு அவதாரங்கள் எடுத்தும், கீதையைப் பொழிந்தும் திருந்தாத ஜீவாத்மாக்களைத் திருத்த, ஆழ்வார்களை அவதரிக்கச்செய்த பிறகும் திருந்தாமை கண்டு, பூமிப்பிராட்டியை ஆண்டாளாக அவதரிக்கச் செய்து, ஆண்டாள் என்ற ஒரு பெண் மூலமாக, உலகையே நாதமயமாக்கி, அரங்கன் நாமமயமாக்கி, ஜீவாத்மாக்களைத் திருந்தச் செய்தான்,அங்கும் இங்கும் எங்கும் நிறைந்த பரம்பொருள் ஸ்ரீமந் நாராயணன். அப்படி பெண்ணால் திருத்திய உலகத்தைப் பெண்ணாக இருந்து பார்ப்போம் என்று அரங்கன் மோகினி திருவுருவம் எடுத்தாரோ என்று தோன்ற, மெல்ல மெல்ல அர்ஜீன மண்டபம் நோக்கி எழுந்தருளுவார், மாயக்கண்ணன், மனம் கவர்ந்த மணாளன் ஆகிய அழகிய மணவாளன்.

அலங்கார பூஷிதையாக, அருட்திருமகளாக, மண்மடந்தையாக, விண்ணிலிருந்து மண்ணுலகம் வந்த இலக்குமிப் பிராட்டியாக அர்ஜன மண்டபம் எழுந்தருளி அரையர் சேவை கண்டருளுகிறார். பெரிய திருமொழியில் 'இரக்கமின்றி' என்ற பாசுரம் அபிநயம், வியாக்யானம் செய்யப்பட பெரிய திருமொழி 170 பாசுரங்கள், திருக்குறுந்தாண்டகம் 20 பாசுரங்கள், திருநெடுந்தாண்டகம் 30 பாசுரங்கள் சேவிக்கப்படுகின்றன.

அரையர் 2ம் நாள் சேவையில் 'சிறையிருந்தவள் ஏற்றம்' .சொல்லும் இராமாயணக் காட்சிகள், இராவணவதம் நடத்தப்பெற்று திருமொழி நிறைவுற்று அரையர், தீர்த்தம்

ஸ்ரீ சடகோபம் பொதுமக்களுக்கு அளிக்க பத்தாம் திருநாள் நிகழ்ச்சியின் இறுதிக்கட்டமாக நம்பெருமாள் மோகினித் திருக்கோலத்தில் கிளிமாலைதரித்து புத்தம்புது ராகமாகக் காட்சியளித்துத் திருக்கொட்டாரப் பிரதக்ஷிணத்தில் வலம்வந்து கருடமண்டபம் சேர்ந்து பக்தர்களுக்கு சுலபமாக சேவை சாதித்து, பகல்பத்து 10 நாட்களும் திருமொழி இயற்றிய ஆழ்வார்களுக்கு மரியாதை செய்து பூரிப்புடன் மூலஸ்தானம் எழுந்தருளுவார்.

**வைகுண்ட ஏகாதசி :**

ஏகாதசி என்றாலே புனிதமானது. அதுவும் வைகுண்ட ஏகாதசி என்றால் அதன் புனிதத்தன்மை எத்தகையது? வைணவத் திருக்கோயில்களின் ஆணிவேராக, 108 திவ்ய தேசங்களின் முதன்மை திவ்யதேசமாக, பூலோக வைகுண்டம் எனப்படும் திருவரங்கத்திருநகரில் இப்புனிதத் திருவிழா சீரும் சிறப்புமாக நடைபெறும் அற்புதத் திருவிழா.

பகல்பத்து 10 நாட்களுக்குப் பிறகு ஏகாதசியன்று நடைபெறும் இத்திருவிழா பலவகையிலும் புகழ்பெற்றது. அத்யயன உத்ஸவத்தின் பிற்பாதியாக, இராப்பத்து திருநாளாக மலரும் வைகுண்ட ஏகாதசித் திருவிழாவின் பெருமை கீழ்க்காணும் சிறப்புடையது.

வைகுண்ட ஏகாதசியன்று விடியற்காலையில் மூலஸ்தானத்தில் திருவாய்மொழித் தொடக்கமும், பட்டர் திருவம்சத்தினரால் 'வேதபாராயண'த் தொடக்கமும் நமைபெற்று, அரங்கன் இரத்தினஅங்கித்திருக்கோலத்தில் மக்களைப் பரமபதத்திற்கு அழைத்துச் செல்லும் வைகுண்ட ஏகாதசிப் புறப்பாட்டிற்குச் சித்தமாக எழுந்தருளுவார். ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்து அர்ச்சாவதாரமாக அரங்கத்தில் எழுந்தருளி, இருஆற்றின் நடுவிலே பள்ளி கொண்டுள்ள ,ஏழு பிரகாரம் நடுவிலே துயில் கொண்டுள்ள அரங்கனின் அற்புத சேவையில் ஈடுபட்டு அவனருள் பெறுவோர் பலர்.

மணிக்கதவிற்கு வெளியே துவாரபாலகர் வாயில் காக்க, பல்லாயிரக்கணக்கான மக்கள் அரங்கனின் அற்புத சேவைக்காக இரவு முதலே காத்திருப்பர். பக்தர்கள் காத்திருக்கும் அந்நிலை ஆண்டாள் பாசுரத்தை நினைவூட்டுகிறது.

"நாயகனாய் நின்று நந்தகோபனடைய வாயில் காப்பானே"
"கொடித்தோன்றும் தோரண வாசல் காப்பானே"
"மணிக்கதவம் தாள் திறவாய்" என்று வேண்டுவது போல் உள்ளது.

குறிப்பிட்ட லக்னம் நெருங்கியவுடன், கொரட்டு மணியம் தலைமை தாங்க, ஸ்ரீபாதம் தாங்குவோர் எழுந்தருள, சம்பந்தப்பட்ட அனைவரும் சித்தமாக, கொரட்டு மணியம் உள்ளே சென்று அ ர ங் க னி ன் அனுமதி பெற்று "ஸ்தானிகர் அருளப்பாடு ஸ்ரீபாதம் தாங்குவோர்" என்றதும், ஸ்ரீபாதம் தாங்குவோர் "நாயிந்தே" என்றபடி உள்ளே செல்ல "மணிக்கதவும்" தாளிடப்படும். பக்தர் மனம் அரங்கனின் சேவைக்காக தவிக்கும். வாய் "ரெங்கா! ரெங்கா"22 என்று முணுமுணுக்கும். தாசநம்பிகள் ஒளிவீசும் பந்தங்களை ஏந்தியபடி நிற்க அனைவரும் பிரார்த்திக்க, அரங்கனின் அருட்கதவும் திறக்கும். "ரெங்கா ரெங்கா" என்ற கோஷம் விண்ணை எட்டும். வைகுண்ட ஏகாதசிப் புனித நாளில் விடியாற்காலையில் அரங்கனின் அற்புத ரத்னாங்கி சேவை கண்களை நிறைத்து, மனதை நிறைத்து நம் வாழ்க்கையை நிறைக்கும் அற்புதக் காட்சியாகும் அது.

கவித்த முடியும், அஞ்சேல் என்ற கையும், ஆசன பத்மத்திலே அழுந்திக்கிடக்கிற திருவடிகளும், புன்முறுவலுமாய், நீலமேக வண்ணனான அரங்கன் செக்கச்சிவந்த இரத்தினங்கள் பொருத்தப்பட்ட செவ்வாடையுடன், கிளிமாலை தோளில் கொஞ்ச தங்கத்திருத்தோளுக்கினியானில் எழுந்தருளும் அற்புதத் திருக்கோலமது.

"மணவாளமாமுனிகளிடம் ஈடு கேட்டு, பின்னொரு ஸ்ரீசைலேசடவென பேசும் அரங்காய எச்சரிக்கை" என்றும், "ஆழ்வார்கள் சொல்கேட்டுப் பூரித்து நின்ற பெருமாள் எச்சரிக்கை" என்றும் கட்டியம் கூற, மக்களைத் தன் அருட்பார்வையினால் கடாக்ஷித்தபடி எம்பெருமாள் எழுந்தருளும் அற்புதப் புறப்பாடு, வைகுண்ட ஏகாதசிப் புறப்பாடு ஆகும். பக்தர்கள் தங்களை மறந்து, அரங்கன் சேவையில் முட்டி மோதிக்கொண்டு அரங்கனை ஒருமுறை பார்க்கமாட்டோமா, அவனருள் பெறமாட்டோமா என்று அலைமோதுவார்கள். வங்கக்கடல் அலையோ, பக்தர்களின் தலையோ என்றபடி எங்கெங்கு நோக்கினும் பக்தர்கள் வெள்ளம், அரங்கன் உரியவர்களுக்கு மரியாதை செய்யும் நேரத்தில் நேரத்தில், நாம் மூலஸ்தானம் சென்று பள்ளி கொண்ட பரமனைச் சேவிப்போம்.

நம்பெருமாள் ரத்தினஅங்கியில் சேவை சாதிக்க, பெரிய பெருமாளோ, பாலெனத்தெரியும் சுத்த வெண்முத்துக்களால் ஆன முத்தங்கியை தரித்துக் கொண்டு நம்மை அருள்பாலிக்கிறார்.

"ஆலமாமரத்திலைமேல் ஓர் பாலகனாய்
ஞாலமேழும் உண்டான் அரங்கத்தரவணையான்
கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில்
நீலமேனி ஐயோ நிறை கொண்டது என் நெஞ்சினையே"

என்ற திருப்பாணாழ்வா பாசுரம் நம்மை பக்திப் பரவசத்தில் ஆழ்த்துகிறது.

பள்ளி கொண்ட பரமனின் மிளிர்ந்து செவ்வெரியோடி நீண்ட அப்பெரிய வாய் கண்கள் நம்மை பேதமை செய்கின்றன. முத்தங்கி திருக்கோலத்தில் 7 நாட்கள் பெரிய பெருமாள் பக்தர்களுக்கு சேவை சாதிக்கிறார். ரத்னங்கி திருக்கோலத்தில் நம்பெருமாள் விரஜா மண்டபம் எனப்படும் பரமபத வாசலுக்கு முன் அமைந்துள்ள நான்கு கால் மண்டபத்தில் பேதவிண்ணப்பம் கேட்டருளுகிறான். பட்டர் திருவம்சத்தினர் வேதத்தை தொடங்கி வைக்க, தொடர்ந்து ரிக், யஜீர், சாம, சந்தோசாம, அதர்வண, சுக்ல யஜீர் முதலான வேதங்கள் முறையாக சேவிக்கப்பட்டுகின்றன. விரஜா நதி தீர்த்மாக தீர்த்த கோஷ்டி முடிவுற்று அரங்கன் பரமபத வாசல் அருகில் எழுந்தருள ஒரே பரபரப்பு. பரமபதவாசல் எப்போது திறந்திருக்கும், நாம் வைகுண்டம் நுழைவோமா என்று பப்தர்கள் கூட்டம் நெரிக்க பக்தர்கள் வெள்ளத்தின் நடுவே குறிப்பிட்ட நேரத்தில் கதவு திறக்க ரெங்கா ரெங்கா என்ற கோஷம் விண்ணை முட்ட அனைவரும் ஆவலுடன் எதிர்பாத்த அரங்கன் வைகுண்ட வாசலில் நுழையும்அற்புதத்தருணம் அது. பல்லி சொல்லும் சொல்லாநிற்க என்றபடி இரு தங்க பல்லிகள் தங்கள் சப்தத்தினால் வைகுண்ட ஏகாதசியன்று அரங்கனுடன் பரமபத வாயில் வைகுண்ட ஏகாதசியன்று அரங்கனுடன் பரமபத வாசல் நுழைபவர்களுக்கு மறுபிறவி கிடையாது என்று சப்திக்கின்றன.

வீறு கொண்ட நடையுடன், அருள் கொண்ட பார்வையுடன் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல், மிக மிக வேகமாக அரங்கன் திருமாமணி மண்டபம் எனப்படும் ஆயிரங்கால் மண்டபம் முன்பு அமைந்துள்ள அலங்காரப் பந்தலில் எழுந்தருளி பக்தர்களுக்கு நான்கு புறமும் சேவை சாதிக்கிறான். பின்னர் ஆழ்வார்கள் மரியாதையாகி ஆழ்வார்கள் புடைசூழ ஆயிரங்கால் மண்டபத்தில் எழுந்தருளி நள்ளிரவு வரை பக்தர்களை அருள்பாலிக்கிறான். இன்று அரையர் சேவையில் விழாக்காரணமான நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் 100 பாசுரங்கள் சேவிக்கப்பட்டு உயர்வற பாசுரம் அபிநயம் - வியாக்யானம் நடைபெறுகிறது. திருஅரங்கன் நள்ளிரவிற்கு மேல் மெல்லிய வஸ்திரம் மேல் தரித்து வீணை ஏகாந்தத்துடன் மூலஸ்தானம் எழுந்தருளி, அற்புத வைகுண்ட ஏகாதசித் திருநாளில் இராப்பத்து முதல்நாள் உத்ஸவம் நிறைவுற்று பக்தர்களை ஆனந்தத்தில் ஆழ்த்தும்.

**இராப்பத்து இரண்டாம் நாள்** முதல் **ஆறாம் திருநாள்** முடிய வைகுண்ட ஏகாதசி அன்றுபோல் உத்ஸவம் கண்டருளும் நம்பெருமாள் ஏழாம் திருநாளன்று

'கங்குலும் பகலும் கண் துயிலறியான்
கண்ண நீர்க்கைகளால் இறைக்கும்
சங்கு சக்கரங்கள் என்றே கைகூப்பும்'

பராங்குச நாயகியாக நம்மாழ்வார் மோகினி திருக்கோலத்திற்கு சேவைக்காக, அரங்கன் திருக்கைத்தல சேவையாக நம்மாழ்வாருக்கும் நமக்கும் சேவை சாதிக்கின்றான்.

**இராப்பத்து 8ஆம் திருநாளில்** திருமங்கையாழ்வார் நம்பெருமாளின் ஆஸ்திகளை வேடுபறி மூலமாக பறிக்க, அவரைத் திருத்தி பணிகொண்டு

'நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்'

என்ற படி நாமத்தின் சிறப்பைத் திருமங்கையாழ்வார் மூலமாக உலகிற்குப் பரப்புகிறார்.

**இராப்பத்து 10ஆம் திருநாள்** நம்பெருமாள் சந்திரபுஷ்கரணியில் தீர்த்தவாரி கண்டருளி, திருமாமணி மண்டபம் சேர்ந்து பட்டருக்கு பிரும்மரத மரியாதையளித்து உத்ஸவம் முடிந்த விதத்தை விளக்க, 'அவப்ருதஸ்நானம்' என்ற திருமஞ்சனம் செய்து கொண்டு, பன்னீராயிரம் திருப்பணியாரங்களை அமுது செய்வார். இராப்பத்து 10 நாட்களும் ஒவ்வொரு நாளும் திருவாய்மொழியின் நூறு பாசுரங்களைச் சேவித்த அரையர் ஸ்வாமிகள் இன்று 'தாள தாமரை'ப் பாசுரத்திற்கு அபிநயம் வியாக்யானம் சேவித்து திருவாய்மொழியின் இறுதிப் பாசுரங்களைச் சேவிப்பார்.

விடியற்காலை நம்மாழ்வாருக்குப் பரமபதம் தரும் முகமாக, நம்மாழ்வார் அரங்கன் திருவடியில் தலை புதைக்க, திருத்துழாயால் திருவாய்மொழியின் இறுதிப் பாசுரங்கள் சேவிக்க, நம்மாழ்வார் மோட்சம் நடைபெற்று, அரங்கன் தான் அலங்கரித்துக் கொண்ட மாலையையும், திருக்கஸ்தூரியையும் ஆழ்வாருக்கு அளித்துத் தன் திருவடி சேர்வோருக்குத் தன்னையே தருவேன் என்றபடி 'எனக்கே தன்னைத் தந்த கற்பகமாக'க் காட்சியளிக்கும் அரங்கனின் சேவை, நம் கண்களைக் குளமாக்கும். இப்படிப்பட்ட சேவை நமக்களித்த அதுவும் அவனது இன்னருளே யன்றோ?

நம்மாழ்வார் மோட்சம் முடிந்த பின்பும், தீர்த்த கோஷ்டியாகி, நாலாயிர திவ்ய பிரபந்தம் இயற்றிய ஆழ்வார் அனைவருக்கும் மரியாதை செய்து, இருபது நாட்களும் கைங்கர்யம் செய்த அரையருக்குப் பிரும்மரத மரியாதை செய்து, பின்னர் நம்பெருமாள் படிப்புத் தீர்த்தம் கண்டருளி, மூலஸ்தானம் எழுந்தருளி அன்று இரவு மூலஸ்தானத்தில் திவ்ய பிரபந்தத்தின் இறுதிப் பகுதியாக 'இயற்பா' கேட்டருளித் திருநாளை நிறைவு செய்வார்.

மார்கழி மாத சுக்லபட்ச ஏகாதசியன்று, பரமபத வாசல் திறக்கும். இத்திருநாள் 22 நாட்கள் திருவரங்கத்தில் சீரும் சிறப்புமாகப் பக்தி பரவசத்துடன் நடைபெறும் அற்புதத் தமிழ் இயல் இசைத் திருவிழாவாகும்.

அடியார்கள் வாழி! அரங்கநகர் வாழி!
சடகோபன் தண்தமிழ் நூல் வாழி!
கடல் சூழ்ந்த மண்ணுலகம் வாழி!
அரங்கனைத் துதிப்போம்! அவனருள் பெறுவோம்!
மன இருள் நீக்குவோம்! மாயவனை அடைவோம்!

★

# பாராட்டு மடல்களில் சில...



**FR-6 THE HINDU, Friday, November 19, 2004**

***Thirukkoil***

The 120-page special edition (Rs.10) of the Hindu Religion and Endowment Board contains eminently readable articles written by renowned authors.

Colourful pictures enhance the quality of the magazine that comes with the messages of the Paramacharya and the Sringeri Acharya. Interesting write-ups with Skanda Sashti and Karthigai deepam in focus and useful snippets make the festival issue, the first ever by the Board, a worthy buy..

**NEWS TODAY**

Another spiritual magazine which has brought out special issue for Deepavali is *Thirukkoyil*, published by the Hindu Religious and Charitable Endowments Department.

Though the magazine has been published for the last 47 years, for the first time, HR & CE department has brought out a special issue for the festival celebrated by the Hindu community as a whole. Pictures have a special place in the issue.

ஜோதிடச் சக்கரவர்த்தி ஏ.எம்.ஆர். எழுதும் "எம்பெருமானார்" கட்டுரை மிகமிக அற்புதம். உணர்ச்சிமிகு நடையில் நம்மை இராமாநுஜர் வாழ்ந்திருந்த காலத்திற்கே அழைத்துச் சென்று விடுகிறார். கட்டுரையில் இடம்பெறும் படங்களும் கண்களில் ஒற்றிக் கொள்ளத் தக்கனவாக உள்ளன.

**- மு. இராமச்சந்திரன்,**
மதுரை.

**அமுதசுரபி**



**திருக்கோவில்**

பாலகுமாரன், சுதா சேஷய்யன் ஆகியோரின் கட்டுரைகள், பல மூர்த்தி களின் முழுப் பக்க வண்ணப் படங்கள் இம்மலருக்கு அழகு சேர்க்கின்றன.

சைவ, வைணவ இறை வடிவங்களைப் பற்றிய பல சுவையான தகவல்களை அளித்து வரும் திருக்கோயில் மாத ஏட்டின் நவம்பர் இதழ், தீபாவளி மலராக அதிகப் பக்கங்களுடன் மிளிர்கிறது.

*120 பக்கங்கள், விலை : ரூ.10.00*

*(இதைப் போன்றே வானமே எல்லை, உரத்த சிந்தனை ஆகிய இதழ்களும் தீபாவளிச் சிறப்புப் பக்கங்களுடன் வெளிவந்துள்ளன.)*

**தமிழன் எக்ஸ்பிரஸ்**

★ அறநிலையததுறை சார்பில் வெளியாகும் 'திருக்கோயில்' மாத இதழின் தீபாவளி மலர். தமிழன் எக்ஸ்பிரஸ் சைஸில் 120 பக்கங்கள். முற்றிலும் வழு வழு காகிதம் + வண்ணம். நேர்த்தியான படங்கள். சு.கி. சிவம் உள்ளிட்ட படைப்பாளிகளின் அறிவைத் தூண்டும் ஆன்மீகக் கட்டுரைகள் என்று ரகளையாய்த் தொகுத்து பத்தே ரூபாய்க்கு 'ப்ரஸண்ட்' பண்ணியிருக்கிறார்கள். நிச்சயம் பாராட்ட வேண்டிய முயற்சி.

தீபாவளி திருக்கோயில் மலரை **அம்பிகை நவராத்திரி குங்குமப் பிரசாதத்துடன்** பெற்று அளவிலா மகிழ்ச்சி அடைந்தோம்.

"**செயற்கரிய செய்வர் பெரியர்**" என்ற குறள் பொன்மொழிக்கு இணங்க, 46 ஆண்டுகளுக்குப் பிறகு முதன் முதலாகத் "தீபாவளி மலர்" வெளியிட்டு மகத்தான சாதனை புரிந்துள்ள அறநிலையத்துறைக்கு எங்கள் அநேக வாழ்த்துக்கள், பாராட்டுகள்.

**- அ.லதா, எம்.ஏ.பி.எட்,**
பவானி - 638001.

**தினமலர்**

**திருக்கோயில்**

**(விலை: ரூ.10-00)**

(இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை வெளியீடு)

இதுவரை 46 ஆண்டுகளில் இல்லாத புதிய முயற்சியாக 'தீபாவளிச் சிறப்பு மலர்' வெளிவருகிறது என்று அறநிலைய ஆட்சித்துறைத் ஜி.ராமகிருஷ்ணன் கூறியிருக்கிறார். ஆனால், மலரில் இடம்பெற்றிருக்கும் அத்தனையும் தரமான படைப்புகள்.

திருவண்ணாமலை நமக்கு 'அண்ணாமலை', ஆனால், ரமண மகரிஷிக்கு 'அண்ணும் மலை', அதாவது நினைத்தபடி அடையும் மலை என்று கருத்துக்களை முன் வைத்திருக்கிறார் சுகிசிவம்.

சிருங்கேரி ஜகத்குரு பாரதிதீர்த்த மகா சுவாமிகள், 'நம்முடைய பிரயத்தனம், மற்றது ஈஸ்வர அனுக்கிரகம், ஆகிய இரண்டும் தேவை' என்பதை அழகாக விளக்கி, மனிதனுக்கு உள்ள விவேகத்தை விளக்கும் கருத்து சிறப்பானது.

மொத்தத்தில் நல்ல கருத்துக்கள் கொண்ட தொகுப்பாகும்.

**The New Indian Express**

**Thirukoyil Rs 10**

A host of articles on temples, essays on elephant camps, rain water harvesting done by the kings of the yore, the principles governing the performance of kumbhabhishekam, the significance of Dhyana and a small piece on village deities make worthwhile reading.

எளிய பத்து ரூபாய் விலையில் 120 பக்கங்களுடன் அழகிய வண்ணப் படங்களுடன் கூடிய தீபாவளி மலர். என்னால் நம்பவே முடியவில்லை. அறநிலையத்துறை ஆணையாளர் அவர்களுக்கு மனமார்ந்த பாராட்டுகள்.

**- நடராஜசுந்தரம்,** திருப்பாம்புரம்

**தியானம்** கைகூடி வர வழிகாட்டியுள்ள **எழுத்தாளர் பாலகுமாரன்** கட்டுரை பயனுள்ள கட்டுரை.

"**முற்றிலும் தளர்வாய் இருத்தலே தியானம்**" என்ற வரிகளைப் படிக்கும் போதே மன இறுக்கம் மறையக்கண்டேன்.

**- இராஜலட்சுமி,** திருச்சி

# விரத மகிமை



'எழுத்துச் சித்தர்' **பாலகுமாரன்**

இந்தக் கார்த்திகை-மார்கழி மாதத்தில் தமிழ்நாட்டில், விரதமிருப்பது என்பது தொன்றுதொட்டு செய்துவரும் பழக்கமாக இருக்கிறது. இப்பழக்கம் சமீப காலங்களில் பல்கிப்பெருகி லட்சக்கணக்கில் மக்கள் விரதமிருப்பதில் விருப்பம் கொண்டு நான் விரதமிருக்கிறேன் என்று அறிவிப்பதற்கான உடைகள் உடுத்துச் சின்னங்கள் அணிந்து கம்பீரமாக வலம் வருகின்றார்கள். விடிகாலையிலும், பின் மாலையிலும் இம்மாதிரி விரதமிருப்பவர்கள் கும்பல் கும்பலாக கோவில்களுக்குப்போயும், பூஜைகளுக்குப் போயும் இறைவழிபாட்டில் ஈடுபடுகிறார்கள்.

கும்பல்கும்பலாக செல்வதாலேயோ, குறுகிய காலத்தில் மட்டுமே விரதத்தில் ஈடுபடுவதாலேயோ, விரதத்தினுடைய ஆழம், இந்த விரதத்தால் ஏற்படுகின்ற அமைதி ஜனங்களுக்கு வருவதேயில்லை, எனவே, இந்த விரதம் பற்றி உரத்த குரலில் சிந்திக்க வேண்டியிருக்கிறது.

விரதம்பற்றிப் புராணங்களில் ஏதாவது சொல்லப்பட்டிருக்கின்றதா?



ஆவுடையார் என்பது அடியில் பீடமாய் இருப்பது. அது சக்தியைக் குறிக்கின்றது. லிங்கம் ஆவுடையாரின் மீது தோன்றிச் சிவத்தினது உண்மைச் சொரூபமாகிய பரவெளியைக் குறிக்கின்றது.

கிருஷ்ணருடைய கதையில் சொல்லப்பட்டிருக்கிறது. கிருஷ்ணருடைய தங்கை அர்ஜீனனைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று நினைத்து மனம் வருந்தி அதனால் உடல்நலம் சீர்குலைந்தபோது யாதவ குலமே கஷ்டப்பட்டது, வேதனைப்பட்டது. ஊர்மக்கள் எல்லோரும் அந்தப் பெண் குழந்தை நல்லபடி உடல்நலம் தேறி நல்ல இடத்தில் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று விரதமிருந்தார்கள்.

கிருஷ்ணரும் விரதமிருந்ததாக கிருஷ்ணருடைய கதை சொல்கிறது. அதாவது அரசருக்காக- ஆள்பவரின் நலனுக்காக யாருமே அழைக்காமல்-அறைகூவாமல் மனமுவந்து ஊரே விரதத்தில் ஈடுபட்டிருக்கிறது. விரதத்தின் பலனாக கிருஷ்ணனுடைய தங்கை உடல் நலம் தேறி அர்ஜுனனைக் கைப்பிடித்தாள் என்றும் கதை சொல்கிறது. அதாவது விரதம் பலிதம் ஆகியது.

விரதம் இருப்பதைப் பற்றி ஆண்டாளும் சொல்கிறார்.

"நெய் உண்ணோம், பால் உண்ணோம், நாட்காலே நீராடி
மையிட்டு நாம் எழுதோம், மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதன செய்யோம், தீக்குறளைச் சென்றோதோம்"

என்று தொடர்கிறார்.

போஷாக்கான உணவுகளைத் தவிர்த்து விடுவோம். விடியற்காலையில் எழுந்திருப்போம். நீராடுவோம். இறைவழிபாடு செய்வோம். கண்களுக்கு மையெழுதியோ, தலைக்கு மலர் சூட்டியோ எங்களை அலங்கரித்துக் கொள்ள மாட்டோம். செய்யக் கூடாதவைகளை வெகு நிச்சயமாகச் செய்யமாட்டோம். ஒருபொழுதும் தவறான வார்த்தைகளை உச்சரிக்க மாட்டோம் என்று திட்டவட்டமாக அறிவிக்கிறார். அப்பொழுது தான் உய்ய முடியும், உருப்பட முடியும் என்றும் பேசுகிறார்.

விரதமிருப்போர் செய்ய வேண்டிய முறையை வெகு எளிதாக ஆண்டாள் சிற்சில வார்த்தைகளில் சொல்லி விடுகிறார்.

விரதமிருப்பவர் முதலில் உணவு பற்றிய தெளிவோடு இருக்க வேண்டும். உணவுக்கும் மனதிற்கும் சம்மந்தம் உண்டு.

கொழுப்புச் சத்து மிக்க உணவுகளை உண்போமானால் மனதில் கோபமும், காம எண்ணங்களும் தலைதூக்கும். எனவே மனம் அலையாதிருக்க உடம்பின் வலுவை சற்றுக் குறைக்க வேண்டும். கொழுப்புப் பொருட்கள் காரம், மணம், மசாலா போன்ற விஷயங்களை அதிகம் தூக்கலாக செய்யப்படும் உணவுகளை தவிர்த்துவிட்டு, நடமாடுவதற்கு மட்டும் தெம்புவரக்கூடிய சாத்வீகமான உணவையே சாப்பிட வேண்டும். சைவ உணவு தான் சாப்பிட வேண்டும். அதையும் குறைவாகச் சாப்பிட வேண்டும்.

வயிறுமுட்ட தின்பவருக்குக் களைப்பும் தூக்கமும் ஏற்படும். ஏனெனில் தின்று தூங்கியவருக்கு உடம்பில் மதமதப்பு அதிகமாகும். அப்படி மதமதப்பு அதிகமானால்

பெரும் குரலும், பெரும் சிரிப்பும், அட்டகாசமான நடவடிக்கைகளும் உள்ளுக்குள் கிளறும். அது விரதமிருப்பதன் அடையாளம் அல்ல.

விடியற்காலையில் குளித்தல் என்பது உடம்பைக் குளிரச் செய்யும் விஷயம். உடம்பு குளுமை அடைந்தால் புத்தி இன்னும் அதிகமாக குளுமை அடையும். புத்தியில் அமைதி படரின் சிந்தனையில் தெளிவு உண்டாகும். இறைவழிபாட்டில் மனம் ஒருமித்து கூடும்.

இறைவழிபாட்டில் மனம் ஒருமித்துக் கூடுவது என்பது சாதாரணமான விஷயம் அல்ல. செய்யும் தொழிலில், பேச்சில்,வாழ்க்கை யுத்தத்தில் மனம் ஒருமைப்பட இறைவழிபாட்டு ஒருமை நிச்சயம் உதவும்.

நன்கு ஒருமைப்பட்டவருக்குக் கோபமோ, ஆத்திரமோ, பொறாமையோ இருக்காது. மாறாய் அம்மாதிரி உணர்ச்சிகள் எழும்போது அவற்றை மெல்லப் பிரித்துப் பின்னுக்கு ஒதுக்கிவிட்டு, எதனால் இவை ஏற்படுகின்றன என்று ஆராயும் மனப்பக்குவமும் வந்து, அது ஏற்படாதிருப்பதற்கு என்ன செய்யவேண்டும் என்ற யோசனையும் ஏற்பட்டு அதைச் செயல்படுத்தக்கூடிய திறமையும் அவர்களுக்கு வந்துவிடும்.

சூரியன் உதிப்பதற்கு முன்பு எழுந்துவிடுபவர்கள் தான் வாழ்க்கைப் போராட்டத்தில் நிச்சயமாகவும், எளிதாகவும் ஜெயிக்கிறார்கள். விடியலில் எழுந்திருக்கும் போது பேச்சிலும், செயலிலும் மிகப் பெரிய மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஆனால் இதையும் தாண்டி மனித மனத்தைத் தொந்தரவு செய்வதற்கு இன்னொரு விஷயமும் இருக்கிறது. அது தான் தன்னுடைய தோற்றம் பற்றிய கர்வம்.

தன்னை அலங்கரித்துக் கொள்ளுதல், தன்னை மிக முக்கியமானவனாகக் காட்டுதல், ஆடைகளில் கவனம் செலுத்துதல்-இரண்டும் இருப்பின் அந்த தோற்றப் பொலிவு, அபரிமிதமான கர்வத்தை ஒரு மனிதருக்குத் தரக்கூடும். தான் அழகாகவும், கம்பீரமாகவும் இருக்கிறோம், தன்னுடைய தோற்றத்தை எல்லோரும் உற்றுப்பார்க்கிறார்கள் என்று ஒருவர் மனதில் தோன்றிவிட்டால் தன்னுடைய புத்தி பின்னடைந்து தோற்றத்தை முன்நிறுத்துவதே முதன்மையான வேலையாகப் போய்விடும்.

உடை ஒரு மாயச் சூழல். உள்ளத்தை மறைக்கின்ற வித்தை. உண்மையான அழகை விட, உண்மையான கம்பீரத்தைவிட, அதிகப்படுத்திக் காட்டுகின்ற ஒரு ஏமாற்று வேலை. குறிப்பாய் பெண்கள், இந்த மாய வலைக்குள் சிக்கித் தோற்றத்தைப் பற்றி அதிக கவலை கொண்டு மற்றவர்கள் தன்னை எவ்விதம் பார்க்கிறார்கள் என்பதையே சிந்தித்துத் தன்னைத் தான் பார்க்க முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டு விடுகிறார்கள்.

மானம் மறைக்கத்தான் உடைகள் என்பது விரதத்தில் இருப்பவருக்கு நன்கு புலனாகவேண்டும். அழகான உடைகள் உடுத்தினால் எங்கும் உட்கார முடியாது. எங்கும் நடக்கமுடியாது. எனவே விரதத்தில் இருப்பவர்கள் அவ்விதம் இல்லாமல் எளிமைக்கு எளிமையாய், எங்கு வேண்டுமானாலும் அமர்ந்துகொள்ளும் வசதியாய் மண்ணோ, மரத்தடியோ, கருங்கல்லோ, கட்டாந்தரையோ எங்கும் சுருண்டு படுக்கும் விதமாய் மெல்லிய கருப்பு ஆடை அணிந்திருப்பார்கள்.

இதையெல்லாம் விட முக்கியமானது என்ன என்று ஆண்டாள் சொல்கிறார் தெரியுமா?

**'செய்யாதன செய்யோம்'**,

விரதத்தில் இருக்கும்போது என்ன செய்யக் கூடாதோ அதைச் செய்ய மாட்டோம் என்று உறுதி கூறுகின்றார்.

என்ன செய்யக் கூடாது?.

ஒரு மோட்டார் சைக்கிளில் மூன்று இளைஞர்கள் உட்கார்ந்து கொண்டு, மூன்று பேரும் கருப்பு ஆடை அணிந்துகொண்டு, ஐயப்பன் மாலை போட்டுக் கொண்டு, 'சாமியே சரணம் ஐயப்பா' என்று உரக்கக் கத்திக்கொண்டு ஒரு தெருவில் முன்னும் பின்னும் வேகமாக மோட்டார் சைக்கிளில் போகிறார்கள்.

'இன்னிக்கு சாயந்தரத்தில் மட்டும் பத்துப் பூஜையில் கலந்துக்கணும்ப்பா' என்று இடுப்பில் கைவைத்து டீக்கடை வாசலில் உரத்த குரலில் பேசுகிறார்கள்.

அந்த இளைஞர்களுக்கு தெரியவில்லை இந்த விஷயங்கள் செய்யக் கூடாதவைகள் என்று புரியவில்லை.

ஆண்டாள் கடைசியாக சொல்கின்ற வார்த்தை இன்னும் மிக முக்கியமானது.

'தீக்குறளைச் சென்றோதோம்'

மனம் தெளிவாக இருந்தால், சொல் தெளிவாக இருக்கும். மனம் லேசாக இருந்தால் சொற்கள் மிருதுவாக இருக்கும். மனம் இறுக்கமாக



இருப்பின் வன்முறையான சொற்கள் வாயிலிருந்து வெளியே வந்துவிடும். உங்களுடைய பேச்சு சொல்லிவிடும் உங்கள் விரதத்தின் லட்சியத்தை. உங்கள் சிரிப்பு சொல்லிவிடும் நீங்கள் விரதம் எப்படி இருக்கின்றீர்கள் என்பதை, அட்டகாசமான சிரிப்பும், ஆரவாரமான பேச்சும் நீங்கள் விரதம் என்பதில் சிறிதளவு கூட ஈடுபடவில்லை என்பதை வெளிப்படுத்துகின்றன.

***நல்லபடியாய் விரதமிருப்பது எப்படி? அதன் லாபம் என்ன?***

விடியற்காலை குளியல், எளிமையான உடைகள், குறைவான, சாத்வீகமான உணவு, அமைதியான பேச்சு, பல நேரங்களில் மௌனம். மௌனம் இருப்பதற்கு ஏற்றதாக உள்ளுக்குள் எப்பொழுதும் இறைவன் நாமாவளி, அவன் பெயரையே திரும்பத் திரும்பச் சொல்லுதல். பூஜைகளில் கலந்து கொண்டு சிறிய வேலைகளைச் செய்தல். அல்லது ஒரு ஓரமாக அமைதியாக இருந்து பூஜையைப் பார்த்தல். மன சஞ்சலம் இல்லாத உடம்பு, எழுச்சி இல்லாத தூக்கம், மறுபடி விடியற்காலையில் எழுந்து மீண்டும் குளுமையான குளியல்.

இது என்ன லாபம் தரும்?. இந்தக் குளியலும் குறைவான உணவும், உடம்பைச் சூடு ஏறாமல் குளுமையாக வைத்திருக்கும். கருப்பு மெல்லிய உடைகள் உங்களைக் கர்வம் கொள்ளாமல் வைத்திருக்கும். நெற்றியில் விபூதி தவிர எந்த பூச்சும் இல்லாமல் காட்சி தரும்போது மனதில் அமைதி பலப்படும்.

அந்த அமைதியோடு பூஜை புனஸ்காரங்களில் கலந்து கொள்ள நேர்ந்தால், மௌனவிரதம் மேற்கொண்டால், நீங்கள் உங்கள் மனதைக் கவனிப்பதற்கு வாய்ப்பு ஏற்படும்.

ஏதோ ஒரு கணத்தில் உங்கள் புத்தியும் மனதும் ஒரு லயத்தில் வந்து நிற்கும். அதாவது புத்தி கூர்மையாகி மனதில் என்ன எண்ணங்கள் போய்க்கொண்டிருக்கின்றன?. என்ன விதமான மனிதனாக நான் இருக்கிறேன்? என்று உங்களை எடைபோட ஆரம்பித்துவிடும். இன்னும் ஆழமாகப் போய் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறேன்?, எதைப் பற்றி ஏன் நினைத்துக் கொண்டிருக்கின்றேன்? என்கிற இடத்திற்கு அழைத்துப் போகும். இன்னதை நினைக்கிற **ஆள்யார்**? என்று அடுத்த கட்டத்திற்கு மனம் நகரும். **இந்த நான் என்பது எது?** என்பதை யோசிக்க ஆரம்பிக்கும்.

எனவே, ஏதோ ஒரு மையத்தில் இருந்து தான் இந்த எண்ணங்கள் கிளம்புகின்றன. எழுந்த இடத்திலேயே எண்ணங்களை உற்றுக் கவனிக்க ஆரம்பித்தால் நம்முடைய செயல்பாட்டினுடைய உத்தேசம் புரிந்துவிடும்.

இவைகள் விரதத்தால் ஏற்பட்ட மகிமை. மாறாக விரதகாலங்களிலும் ஆரவாரம் செய்தீர்கள் என்றால், விரதஉடையையும் அலங்காரம் என்று நினைத்தீர்கள் என்றால், விரதத்தோடு நடை பெறும் பூஜையை வெறும் கொண்டாட்டமாக நினைத்தீர்கள் என்றால் வாழ்க்கை மிகப் பெரிய சிக்கலாகி, பரபரப்புகளில் மனம் சிக்கி, சின்ன தோல்விகளுக்கு மிரண்டு போய், சிறிய வெற்றிகளுக்கு அலட்டுதல் ஏற்பட்டு, மற்றவரோடு பிரிவினையும், தடித்த பேச்சுவார்த்தைகளும், மன முறிவுகளும் ஏற்படும்.

வாழ்க்கை என்பது தொடர்பு கொள்ளுதல். மற்றவரோடு தொடர்பு கொள்ளுதல்.

ஒரு மனிதன் தன் குடும்பத்தாரோடே நல்ல தொடர்பு வைத்துக்கொள்ள முடியவில்லை யெனில் வேறு யாரோடு என்னவிதமான தொடர்பு வைத்துக்கொள்ள முடியும்?.

தன் குடும்பத்தாரையே வசீகரிக்க முடியவில்லையெனில் வேறு யாரை வசீகரித்து என்ன பயன்?

**கூடி வாழ்தல் கோடி நன்மை.**

**கூடிவாழத்தான் விரத மகிமை.**

★

## யானைகள் சிறப்பு நலவாழ்வு முகாம்



18.11.2004-ல் யானைகள் சிறப்பு நலவாழ்வு முகாம் முதுமலை வனவிலங்கு சரணாலயத்தில் துவங்கப்பட்டுள்ளது. இம்முகாம் 4.1.2004 வரை (48 நாட்கள்) நடைபெறவுள்ளது. இம்முகாமில் திருக்கோயிலுக்குச் சொந்தமான 35 யானைகளும், தனியாருக்குச் சொந்தமான 29 யானைகளும் ஆக மொத்தம் 64 யானைகள் பங்கேற்றுள்ளன. இது தவிர வனத்துறைக்குச் சொந்தமான 25 யானைகள் முதுமலையிலும், 23 யானைகள் டாப் ஸ்லிப் முகாமிலும் கலந்து கொண்டுள்ளன. கடந்த ஆண்டு முகாமில் பெற்ற பலனைக் கருத்திற் கொண்டு இவ்வாண்டுத் தனியாருக்குச் சொந்தமான யானைகள் கடந்த ஆண்டைவிட கூடுதலாகப் பங்கேற்றுள்ளன.

யானைகள் முகாமை ரூ.10/- கட்டணம் செலுத்தி (மாணவ, மாணவியருக்கு கட்டணச் சலுகை ரூ.5/- மட்டும்) பொது மக்களும் பார்வையிட வசதி செய்யப்பட்டுள்ளது.

# மார்கழி நோன்பு நல்கும் மங்கலப் பயன்கள்

- நிறைமதி



ஸ்ரீ ஆண்டாள்

நாடும், வீடும் நலமும் வளமும் பெறுவதற்காகவே மாதங்களில் சிறந்த மார்கழி மாதத்தில் திருப்பாவையும், திருவெம்பாவையும் ஓதி வைகறைப்பூசை நிகழ்த்தி மார்கழி நோன்பினை போற்றுமாறு ஆண்டாளும், மாணிக்கவாசகரும் அருளிச் செய்துள்ளார்கள்.

தைமாதம் முதல் ஆனி மாதம் முடிய உள்ள மாதங்கள் உத்தராயணப் புண்ணியகாலம் ஆகும். ஆடிமாதம் முதல் மார்கழிமாதம் முடிய உள்ள 6 மாதங்கள் தட்சிணாயணப் புண்ணியகாலம் ஆகும்.

தட்சிணாயண காலத்தின் இறுதியாக உள்ள மார்கழி மாதம் தேவர்களுக்கு விடிகாலைப் பொழுதாகும்.

மார்கழி மாதத்தில் ஆற்றிடும் தெய்வ வழிபாடு, பிரம்ம முகூர்த்த வழிபாடு, நாடும், வீடும் ஓங்க வழிவகுக்கும் என்பதாலேயே மார்கழி விடிகாலை வழிபாட்டினை நம் அருளாளர்கள் போற்றி வலியுறுத்தியுள்ளார்கள்.

தனு, கரணம், புவனம், போகம் ஆகியவற்றை உயிர்களுக்கு அருளும் இறைவனுக்கு நன்றிகாட்டும் வகையில் மார்கழி மாதத்தில் தெய்வ வழிபாட்டிற்கே முதலிடம் என்பதால் இம்மாதம் பீடுமிக்க மாதமாகப் போற்றப்படுகிறது. பீடுமிக்க மாதம் என்பதையே கண்ணபெருமான் பகவத் கீதை உபதேசத்தில் "மாதங்களில் நான் மார்கழியாகத் திகழ்கின்றேன்" எனத்தெளிவுபடுத்தியுள்ளார்.

மங்கல மார்கழி மாதத்தைப் 'பீடை மாதம்' எனச் சிலர் தவறாகக் கூறுகின்றனர்.

மார்கழிநோன்பினால் மக்கள் பெறத்தக்க புண்ணிய பயன்களில் தலையாய இரண்டில் ஒன்று நாடு உய்ய பெய்யும் நல்ல மழை வளம், மற்றொன்று, வீடு உய்ய கிட்டும் நல்ல வாழ்க்கைத் துணைநலம்.

"மாரியின்றி ஒரு காரியமும் இல்லை" என்பது நாம் யாவரும் கண்கூடாகக் கண்டறிந்த உண்மை ஆகும்.

மார்கழி நோன்பினால் தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்யும். இதனைச் "சூடிக்கொடுத்த சுடர்க்கொடி" ஆண்டாள் தாம் அருளியுள்ள திருப்பாவையில்

"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்குப்பெருஞ்நெல் ஊடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலை பற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்"

என்று அருளிச் செய்திருக்கக் காணலாம்.

காக்கும் கடவுளான திருமாலின் வண்ணம்போல் கார்மேகம் திரண்டு, அவர்தம் சுதர்சனச் சக்கரம்போல் மின்னல் மின்னி, அவர்தம் பாஞ்சசன்னிய சங்கினைப்போல் இடிமுழங்கி, அவர்தம் கைவில்லாகிய சார்ங்கம் அம்புமழை பொழிவதைப் போல் ஞாலம் வாழ நல்ல மழை

எல்லா ஆண்டும் பொழிய வேண்டும் என வேண்டும் திருப்பாவைப்பாடல் பின்வருமாறு:

"ஆழிமழைக் கண்ணா! ஒன்றும் நீ கைகரவேல்
ஆழியுள்புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடை பத்மநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்"
*(திருப்பாவை,4)*

மாணிக்கவாசகரும் திருவெம்பாவையில் அண்டமெலாம் காக்கும் பராசக்தியின் மேனி வண்ணம்போல் கருமை கொண்டு, பராசக்தியின் சிற்றிடைபோல் மின்னலும் மின்னித் தோன்றி, அன்னையின் பொற்பாதச் சிலம்புகள் முழங்குவதுபோல் இடிமுழங்கி, அன்னையின் திருப்புருவம் போல் வானவில்லும் தோன்றிப் பராசக்தியின் திருவருள்போல் பாரெல்லாம் வாழ மழைபொழிய வேண்டும் என வேண்டுகிறார்.

"முன்னிக்கடலைச் சுருக்கி எழுந்து உடையாள்
என்னத் திகழ்ந்து எம்மை ஆளுடையாள்
இட்டிடையின்
மின்னிப் பொலிந்து எம்பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நம்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கும்
முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழைஏலோர் எம்பாவாய்".
*(திருவெம்பாவை)*

திங்கள் மும்மாரி பொழிவதால் ஓங்குப்பெருஞ் செந்நெல் முதலான பயிர்வகைகள் செழித்து வளர்ந்து இவ்வையம் என்றென்றும் வளமோங்கி வாழ்வுபெறுவது திண்ணமாகும்.

அதைப்போல் நல்ல வாழ்க்கைத் துணை மார்கழிநோன்பினால் வாய்க்கப்பெற்று ஒவ்வொரு இல்லமும் தழைக்கும் என்பதனைத் திருவெம்பாவையும், திருப்பாவையும் மார்கழிநோன்பினால் மக்கள் பெறத்தக்க மாண்பயனாகத் தெளிவு படுத்துகின்றன.

"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்
பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே
பாங்காவோம்
அன்னவரே எங்கணவர் ஆவார் அவருகந்து
சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்னவகையே எமக்கெங்கோன் நல்குதியேல்
என்னகுறையும் இலோம் ஏலோர் எம்பாவாய்".
*(திருவெம்பாவை)*

"சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன்
பொற்றாமரைஅடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண்
கோவிந்தா.
எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்".
*(திருப்பாவை, 29)*

எனவரும் பாடல்கள், நல்ல வாழ்க்கைத் துணைநலம் மார்கழி நோன்பின் பயனாக உண்டாகும் எனத் தெரிவிக்கின்றன.

# தேவி உமைவடிவில் அர்ச்சகர் வழிபடும் திருத்தலம்

சிவபெருமான் திருக்கோயில் கொண்டு விளங்கும் பஞ்சபூதத் திருத்தலங்களில் திருவானைக்காவல் திருத்தலம் நீருக்கான திருத்தலமாகும். ஜம்புலிங்கசேத்திரம் என அழைக்கப்படுகிறது.



இம்மகிமைமிக்க திருவானைக்கா திருத்தலத்தில் தேவி உமை வழிபட்டு அருள்பெற்ற நிகழ்ச்சியைக் கொண்டாடும் வகையில், இக்கோயிலில் உச்சிகாலப் பூஜை நடத்தவரும் கோயில் அர்ச்சகர் அகிலாண்ட நாயகி கோயிலிலிருந்து அந்த அம்மனைப் போலவே பெண் உருவேற்று, கிரீடம் உருத்திராட்ச மாலையும், பூவும் நீரும் கையில் ஏந்திக் கொட்டு மேளத்தின் ஓசையுடன், மூன்றாம் பிரகாரத்தை வலம் வந்து , அருள்மிகு ஜம்புகேஸ்வரர் கருவறைக்குள் சென்று தன்னை அம்பிகைபோல் பாவித்து, சிவவழிபாடு செய்கின்றார்.

இது உச்சிகாலப் பூஜையின் போது நடைபெறும் அபூர்வ தரிசனம் ஆகும்.

# திருவாதிரை

திருவாதிரை சிவபெருமானுக்கு உரிய நன்னாள். அந்நாளில் தான் உயிர்களின் நலம் கருதி ஐந்தொழில்களை இயற்ற இறைவன் திருவுருவம் கொண்டார்.

ஒரு தொழிலைச் செவ்வனே செய்து முடிக்க விரும்புவோர் வைகறையில் எழுந்து நல்ல வேளையில் அதனைத் தொடங்குவர்.

மார்கழிமாதம் தேவர்களுக்கு வைகறையாகும்.

மார்கழியில் திருவாதிரையில் உயிர்கள் யாவும் நலம் பெறும் பொருட்டு சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் பஞ்ச கிருத்தியங்களையும் இயற்றத் திருவுளங்கொண்டு தலைப்படுகின்றார்.

இக்கருத்தினை உணர்த்தும் வகையிலேயே சிவாலயங்கள் அனைத்திலும் திருவாதிரை விழா (ஆருத்ராதரிசனம்) நிகழ்த்தப் பெறுகின்றது.

ஆண்டாள் திருப்பாவை பாடி, பாவை நோன்பு இயற்றியதன் பயனாக அரங்கனையே மணவாளனாகத் தாம் அடைந்து பேரின்பப் பெருவாழ்வுற்றார் என்பதை அவர்தம் அருள் வரலாறு நமக்குத் தெளிவுபடுத்துகின்றது.

"வாரணம் ஆயிரம் சூழ வலம் செய்து
நாரணநம்பி நடக்கின்றான் என்றெதிர்
பூரணப் பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் கட்டக் கனாக் கண்டேன் தோழி நான்"

"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூனன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழிநான்"

எனக் கனாக் கண்டு, கண்டவாறே அரங்கனையே மணவாளனாக அடைந்தார் ஆண்டாள் என்றால், யாவும் மார்கழிநோன்பின் மங்கலப் பயன் ஆகும் அன்றோ!

இறைவன் தலைவன், உயிர்கள் ஆகிய நாமெல்லாம் தலைவனிடம் திருவருளை நாடியுள்ள பாவைகள். நாம் பாவை நோன்பு இயற்றினால் மும்மலங்களாகிய தூக்கத்திலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளலாம். இறைவனின் திருவருளாகிய தடாகத்தில் இறைவன் புகழை உள்ளூரப் பாடிப்பாடி ஆனந்தமாக நீராடலாம். இவ்வாறு மார்கழி நோன்பிருந்து வைகறையில் நீராடி இறைவனை வழிபட்டால் பிறவித்துயர் கெடும், முத்திப்பதம் கிட்டும். இவ்வுண்மையை நமக்குத் தெளிவுபடுத்துவதே மார்கழி நோன்பாகும்.

"போற்றி யருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி யருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றி எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றி மால்நான் முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழி நீராடேலோர் எம்பாவாய்".

(திருவெம்பாவை)

"அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி
குன்று குடையா எடுத்தாய் குணம்போற்றி
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்று உன்சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோர் எம்பாவாய்".

(திருப்பாவை)

★

# திருமால்



**சங்கு :** சங்கிலிருந்து உண்டாகும் ஓங்காரப் பிரணவ ஒலியால் இறைவன் எல்லாவற்றையும் படைக்கின்றான் என்பதை உணர்த்துகின்றது.

**சக்கரம் :** உலகத்தையெல்லாம் இறைவன் இறுதியில் அழிக்கின்ற செயலை உணர்த்துகின்றது.

**கதாயுதம் :** ஓயாத சஞ்சலம் நிறைந்த உலகவாழ்வாகிய பெரும் போரில் நம்மைத் தாக்கும் சுகதுக்க ரூபமான அம்புகளைத் தடுக்கும் புத்தியைக் குறிக்கின்றது.

**அபயஹஸ்தம்:** எல்லா உலகங்களையும் எவ்வுயிர்களையும் இறைவன் காத்து இரட்சிக்கின்றான் என்பதை உணர்த்துகின்றது.

**கௌஸ்துபமணி :** பிரபஞ்சத்துள் ஆடும் பரஞ்சோதியாகிய அந்தராத்மாவை உணர்த்துகின்றது.

**ஸ்ரீ வத்ஸம் :** சகலத்திற்கும் ஆதாரமாகிய ப்ரதானம் என்ற தத்துவத்தை உணர்த்துகின்றது.

108 அல்லது 1008 சங்குகளைக் கொண்டு புனித தீர்த்தத்தை முகந்து இறைவனுக்குச் செய்யப்படும் அபிடேகமே சங்காபிடேகம் எனப்படும்.

சங்கு மிக்க புனிதமுடைய பொருளாய் பூசனைக்குத் துணைபுரியும் நற்கருவியாகப் பெரியோர்களால் போற்றிக் கொள்ளப் பட்டுள்ளது.

சங்குகள் முறையே இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம் என நான்கு வகைப்படும்.

இப்பி ஆயிரம் சூழ்ந்தது இடம்புரி.
இடம்புரி ஆயிரம் சூழ்ந்தது வலம்புரி.
வலம்புரி ஆயிரம் சூழ்ந்தது சலஞ்சலம்.
சலஞ்சலம் ஆயிரம் சூழ்ந்தது பாஞ்ச சன்னியம்.
சங்கு முழங்குவது நல்ல நிமித்தத்திற்கு அறிகுறி.



# சங்காபிஷேகச் சிறப்பு

“கைவிட மாட்டான் என்று ஊது, ஊது சங்கே,
கனக சபையான் என்று ஊது ஊது சங்கே”
என்று பாடுகின்றார் இராமலிங்க சுவாமிகள்.

மகாபாரதம் பஞ்ச பாண்டவர்களும், கண்ணபெருமானும் தத்தமக்கென ஒரு சங்கு வைத்துக் கொண்டிருந்ததைக் குறிப்பிடுகின்றது.

தருமரின் சங்கு அனந்தவிஜயம்.
பீமனின் சங்கு பவுண்டரம்.
அர்ச்சுனனின் சங்கு தேவதத்தம்.
நகுலனின் சங்கு சுகோஷம்.
சகாதேவனின் சங்கு புஷ்பகம்.
கண்ணபிரானின் சங்கு பாஞ்சசன்னியம்.

சங்கின் அமைப்பு பிரணவம் என்னும் ஓங்காரத்தினை ஒட்டித் திகழ்கின்றது.

திருக்குற்றாலநாதர் கோயிலின் வடிவம் சங்குபோல அமைந்துள்ளதாகத் தலபுராணம் கூறுகின்றது.

திருக்கழுக்குன்றம் சங்கு தீர்த்தத்தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை சங்கு ஒன்று தோன்றுகின்றது. அச்சங்குகளைக் கொண்டே சங்காபிஷேகம் நிகழ்த்தப்பெறுவது இத்திருத்தலத்தின் சிறப்பாகும்.

திருக்கடவூர் அபிராமி அம்மை உடனுறை அமுதகடேசுவரர் திருக்கோயிலில் மிகத் தொன்னெடுங் காலம் முதலாக சங்காபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

முசுகுந்தன் என்னும் சோழ மன்னன் ஒரு சமயம் திருக்கடவூர் வந்தான். இறைவருக்கே உரிய தீர்த்தத்தில் அவன் நீராடியதால் அவன் உடலை ஒரு கொடிய நோய் பற்றிக் கொண்டு வருத்தியது.

அதற்குக் கழுவாயாக 1008 சங்குகள் கொண்டு சிறந்த மருத்துவப் பொருள்கள் இட்ட புனித நீரால் இறைவனுக்கு அபிடேகம் செய்வித்துத் தனக்கு ஏற்பட்ட பிணி நீங்கி நலம் பெற்றான்.

அதுமுதல் ஆண்டுதோறும் கார்த்திகை மாதத்துச் சோம வாரம் ஒவ்வொன்றிலும் திருக்கடவூரில் சங்காபிஷேகம் நடைபெற்று வருகின்றது என்பது வரலாறு.

திருக்கடவூர்க் கோயிலில் நிகழ்த்தப் பெறும் சங்காபிடேகத் தீர்த்தத்தில் எட்டுவகை மலர்கள், எட்டுவகைப் பத்திரங்கள், ஏழுவகை மருந்துப் பொருள்கள், ஐந்து வகை உலோகங்கள், ஒன்பது மணிகள், பப்பத்துக் காய்கனிகள், ஏழுவகை நறுமணப் பொருட்கள், ஒன்பது வகைப் பாடாணங்கள், ஏழு நதித் தீர்த்தங்கள், தானியங்கள், மூலங்கள், மலைபடு பொருள்கள், கடல்படு பொருள்கள் முதலியன ஆகம முறைப்படி தொகுத்துக் கலக்கப்பெறும்.

அப்புனிதத் தீர்த்தத்தை ஆயிரத்தெட்டுச் சங்குகளால் முறையே முகந்து மந்திரங்கள் ஓதி, இறைவருக்குத் திருமுழுக்காட்டுவது பக்தர்களுக்குப் பேரின்பம் நல்கும் அற்புதக் காட்சியாகும்.

சங்காபிஷேகம் கண்குளிரக் கண்டு இறைவனை வழிபடுவதால் மலமாசுகள் நீங்கும். சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வு கைகூடும். ★

# அருள்மழை பொழியும் நாமக்கல் ஸ்ரீ ஆஞ்சநேயர்

நாமக்கல் நகரில் நடுநாயகமாக விளங்கும் மலையானசாளக் கிராமத்தை நேபாள தேசத்திலிருந்து எடுத்து வந்து ஸ்ரீ நரசிம்ம மூர்த்தி திருஉளப்படி இந்நகரில் ஸ்தாபனம் செய்து "ஸ்ரீநாமகிரி" நாமக்கல் என்னும் திருப்பெயரை நிலைநாட்டிய பெருமை ஸ்ரீ ஆஞ்சநேயரையே சார்ந்தது.

நமது குறைகள் நீங்கவே விஸ்வரூபத் திருக்கோலத்துடன் நிமிர்ந்து கை கூப்பி நிற்கிறார்.

மேலே விதானம் இன்றித் திறந்த வெளியில் காற்று மழை, வெய்யில் இவைகளை லட்சியமின்றி தாங்கிக் கொண்டு கம்பீரமாகத் தரிசனம் கொடுக்கிறார். இன்னமும் வளர்ந்து கொண்டிருப்பதால் மேல் விதானம் கட்டப்படவில்லை. மேல் விதானம் தேவையில்லை என்று முன்னோர்கள் விதானம் கட்ட முயற்சித்த போது ஸ்ரீஆஞ்சநேயர் சொப்பனத்தில் அருளியதாகச் சொல்லப்படுகிறது.


ஸ்ரீ நாமக்கல் ஆஞ்சநேயர்

இத்தலத்திற்கு வரும் பக்தர்கள் மிகவும் பயபக்தியுடன் ஸ்ரீஆஞ்சநேயரிடம் தமது குறைகளைச் சமர்ப்பித்து தம்மால் செய்ய முடியாத செயல்களையும் ஸ்ரீஆஞ்சநேயர் உதவியால் சாதித்துகொண்டு தங்களால் இயன்றவழிபாடுகளை நிறைவேற்றுகிறார்கள். நவகிரகங்களில் குருரமான சனி, ராகு இவர்கள் பிரீதிக்காக விஸ்வருப ஆஞ்சநேயருக்கு நல்லெண்ணெயில் செய்த உளுந்த வடைகளால் செய்த மாலைகள் சாற்றியும் விசேஷதிரவியங்களால் அபிஷேகங்கள் செய்வித்தும், புஷ்பங்களாலும் வாசனை சந்தனத்தாலும் அலங்காரம் செய்து மகிழ்ந்து தங்கள் பிரார்த்தனைகளைச் செலுத்துகிறார்கள்.

ஸ்ரீ ஆஞ்சநேயரை வழிபட்டால் நற்புத்தி, சரீரபலம், கீர்த்தி, அஞ்சாமை, பயமின்மை, நோயின்மை, தளர்ச்சி இன்மை, வாக்குசாதுர்யம் முதலிய நன்மைகள் ஏற்படும்.

எங்கெல்லாம் ஸ்ரீ ராம பஜனையோ, ராமாயண காலட்சேஷபமோ நிகழ்ந்தாலும் அங்கெல்லாம் ஆனந்த பாஷ்யம் நிரம்பி கண்களுடன் தலையில் கூப்பிய கைகளுடன் அரூபியாக அருகில் நின்று செவிமடுக்கிறார் ஸ்ரீஆஞ்சநேயர் என்பதைப் புராணங்கள் கூறுகின்றன.

சில இடங்களில் மேற்படி நிகழ்ச்சிகள் நடத்தினால் அனுமாருக்காக ஓர் ஆசனம் அமைத்து வழிபடுகிறார்கள். அதே நிகழ்ச்சிகள் ஸ்ரீஆஞ்சநேயர் திருச்சன்னதியில் நடந்தால் சிறப்பு பெற ஐயமென்? மிக சக்தி வாய்ந்த விஸ்வரூப ஆஞ்சநேயருக்கு பிரதி வருஷமும் மார்கழி அமாவாசை அன்று ஜயந்தி விழா விசேஷமாக கொண்டாடப்படுகிறது. அடிக்கடியும் பக்தர்களால் சிறப்பாக அபிஷேகமும், வடைமாலை, சந்தனக் காப்பு, புஷ்பலங்காரம்

**பஞ்சமுக ஆஞ்சநேயர் உள்ள திருத்தலங்கள்**

1. கும்பகோணம் (சக்கரபாணி கோயில் பிரகாரம்)
2. சேலம் கந்தாஸ்ரமம் (18 அடி உயரமுள்ளது)
3. காஞ்சிபுரம் (ஏகாம்பரேசுவரர் ஆலய முன்மண்டபத் தூண்)
4. நங்கநல்லூர் - இராஜராஜேஸ்வரி ஆலயம்.
5. வட்குடி.

முதலியவை நல்ல முறையில் கொண்டாடப்படுகிறது.

முன்பு ஒரு சமயம், நவகிரகங்களில் அதிக குரூரமான ராகுவும், சனியும் ஸ்ரீஆஞ்சநேயரிடம் தோல்வியுற்றதனால் ஆஞ்சநேயருக்கு கீழ்ப்படிந்தார்கள். பூவுலகில் மாந்தர்களுக்குச் சனியாலும், ராகுவாலும் ஏதேனும் இடையூறு ஏற்படின் அவர்களைத் திருப்தி படுத்துவதின் பொருட்டு, ராகுவுக்குப் ப்ரீதியான உளுந்தும், சனிக்குப் ப்ரீதியான எள் எண்ணெயாலும், செய்த வடை மாலையை ஸ்ரீஆஞ்சநேயருக்குச் சாத்தி வழிபட்டால், சனி, ராகு இவர்களுடைய இடையூறிலிருந்துமனிதர்கள் விடுபடுகிறார்கள் என்பதற்காகவே தான் ஸ்ரீஆஞ்சநேயருக்கு வடைமாலை சாத்துகிறார்கள்.

அறிவுக் கூர்மையும், ஆற்றல் சக்தியும், வல்லமையும் பெற்ற ஸ்ரீஆஞ்சநேயர் யாவராலும் சாதிக்க முடியாத நுண்ணிய காரியத்தையும் தானே தனியாக சாதிக்கும் வல்லமை பெற்றவர். நெருங்க முடியாத வெப்பத்தையும், பார்க்க முடியாத ஒளியையும் கொண்ட சூரியனை, உதித்து வரும் வேளையில் பழம் என்று நினைத்து விளையாடி சூரியனின்(பகவானின்) அருள் பெற்றவர் ஆஞ்சநேயர்.

அப்போது சூரியனை நாங்கள் தான் பிடிப்போம் என்று ராகுவும், கேதுவும், வானரமாகிய நீ பிடித்தது தவறு என்று கூற ராகுவையும், கேதுவையும் வீழ்த்தினார். அப்போது ராகு, கேது வேண்டுதல்படி தேவேந்திரன் அனுமனிடம் யுத்தம் செய்யும் போது இந்திரனின் வஜ்ராயுதம், ஸ்ரீ ஆஞ்சநேயரின் தாடையில் பட்டு வீங்கி விடுகிறது. அனு என்றால் தாடை, மான் என்றால் பெரியது ஆதலால் ஹனுமான் என்று பெயர் வழங்கலாயிற்று.

ராகு, கேது தாம் ஆஞ்சநேயரிடம் தோற்றதின் அடையாளமாக தங்களுக்கு ஏற்பட்ட தான்யங்களை ஸ்ரீஹனுமானுக்கு ப்ரீதியாக அளிக்கின்றனர். எங்களுக்கு ஏற்பட்ட உளுந்துகளினால் எங்கள் சரீரம் போல் வடைமாலை செய்து சாத்துபவர்களிடம் எங்கள் உபாதைகள் குறையும் என்றும் விண்ணப்பித்தனர்.

மாருதியிடம் சேது பாலம் அமைக்கும் சமயத்தில் சனி பகவான் உன்னைப் பிடிக்கும் காலம் வந்து விட்டது எனக் கூற மாருதி (அனுமான்) ராமகைங்கர்யம் முடிந்து வருகிறேன் என்று சொல்ல, இல்லை உன்னை இப்போதே பிடித்தே தீரவேண்டும் என்று சனி பகவான் கூறினார். சனி பகவானும் அனுமனின் சிரசு மீது ஏறிக் கொள்கிறார். பாறைகளை உருட்டி சேதுவுக்கு அணைகட்ட தன் சிரசு மீது வைக்கும்படியாக ஆஞ்சநேயர் கூற, அப்பாறைகளின் அழுத்தம் தாங்காது சனிபகவான் என்னை இறக்கிவிடு போதும் என்கிறார். விஸ்வரூபியாய் இருந்த அனுமனும் அவரை இறக்கி விடுகிறார். சனிபகவான் இத்தலத்தில் எனக்கு ஏற்பட்ட நல்லெண்ணை (எள்ளு)யினால் எவர் உனக்கு வடைமாலை சாத்துபடி செய்கிறார்களோ அவர்களிடம் என் உபாதைகளைக் குறைத்துக் கொள்வேன் என்று உறுதி கூறுகிறார்.

ராகுதோஷ நிவர்த்திக்காவும், சனிதோஷ நிவர்த்திக்காகவும் வடைமாலை சாத்தப்படுகிறது.

இலங்கையைத் தீக்கிரையாக்கி இலங்கையின் ஆணவத்தை எரித்த இறைவன் திருமேனி குளிர்ச்சி பெறும் பொருட்டு சந்தனமும் வால் ,தொடை,திருவடிகளில் வெண்ணையும் பக்தர்கள் பூசி மகிழ்கிறார்கள். நம்முடைய தீராத உஷ்ண உபாதைகள் தீரவும் லக்ஷ்மிகடாஷம் பெறவும், சந்தனக்காப்பு, வெண்ணைக் காப்பு, புஷ்பங்கி செய்து வழிபடுகிறோம்.

யாராலும் நெருங்க முடியாத சீதையை நேரில் கண்டு அவள் திருக்கரங்களால் கொடிக்கால் (வெற்றிலை) இலையினால் ஆசிபெற்றது ஆகியன ஆஞ்சநேயர் சிறப்புகளில் ஒன்றாகும்.

அநுமனுக்குச் சீதை ஆசி வழங்கியதால் அனுமன் வெற்றியடைந்தார். அதனால் அந்த இலைக்கு வெற்றி தரும் இலை வெற்றிலை என்று பெயர் வந்தது. இலங்கையின் ஆணவத்தை தீக்கிரையாக்கியது, யாராலும் அழிக்க முடியாத மஹிராவணனை பஞ்சமுகம் கொண்டு அழித்தது, யாராலும் இதயத்தில் நிறுத்த முடியாத ராம-சீதாவை தன் இருதயத்தினுள் அமைத்து நிலைப்படுத்தியது ஆகியவை ஆஞ்சநேயர் ஆற்றலைக் குறிக்கின்றன.

இதுபோல் நாமும் நம் மாருதி தாள்பணிந்து நம்முடைய செய் தொழில் ஓங்கி சீர்வளர்சீர் வாழ்வும் பெற்று நீங்காத பொருட்செல்வம், தாழாத மக்கட் செல்வம் தூய புத்தி, மாறாத கீர்த்தி, மறவாத வார்த்தை இவையனைத்தும் பெற்று மாருதியாகிய க்ரியா சக்தியின் திருவருள் பெறுவோமோக. ★

### ஆஞ்சநேயருக்குச் சாற்றும் வெற்றிலை மாலைச் சிறப்பு

பக்தர்கள் தம் வேண்டுதல் எக்காரியமாக இருந்தாலும் வெற்றி யடைய வேண்டும் என்ற காரணத்தினால் வெற்றிலை மாலையை ஆஞ்சநேயருக்குச் சாற்றித் தம் வேண்டுதலை நிறைவேற்றிக் கொள்கிறார்கள்.

# நல்லவற்றை உடனே செய்க! தீயவற்றைத் தள்ளிப்போடு!



இராமபாணம் பாய்ந்து இராவணன் போர்க்களத்தில் குற்றுயிரும் குலையுயிருமாய் கிடக்கின்றான்.

இராமன் தன் தம்பி இலக்குவனை அழைத்து "இராவணன் மிகச் சிறந்த இராஜதந்திரி. நீ அவனிடம் போய் இராஜதந்திரங்களை அறிவுரையாகக் கேட்டுவா, போ" என்று கூறி அனுப்புகின்றான்.

இலக்குவனும் இராவணனின் உயிர்நீங்கும் தருவாயில் அவன் பெற்ற அனுபவத்தை இராஜதந்திரத்தைக் கூறுமாறு வேண்டுகின்றான்.

இராவணன் கூறுகின்றான்.

"இலட்சுமணா! நான் சர்வ வல்லமையுடன் விளங்கினேன். நவகிரகங்களும், எமனும், இந்திரனும் கூட எனக்குக் கீழ்ப்படிந்திருந்தனர். அப்போது எனக்கு ஒரு எண்ணம் தோன்றியது".

"இனி நாட்டில் நரகம் ஒருவருக்கும் இல்லை, எல்லோருக்கும் சொர்க்கம் தான் என ஆணை பிறப்பிக்க வேண்டும். இறந்தபின் எல்லோரையும் சொர்க்கத்திற்கு ஏற்றிச் செல்ல மயனைக் கொண்டு ஒரு பறக்கும் ஏணியைப் படைக்க வேண்டும்".

இவ்வாறு எண்ணிய நல்லெண்ணத்தைச் செயற்படுத்தாமல் "அப்புறம் செய்யலாம்" என ஒத்திப்போட்டேன். நான் அந்த எண்ணத்தைச் செயற்படுத்தியிருந்தால் இறந்துபட்ட என் படை முழுவதும் சொர்க்கம் செல்ல உதவியிருப்பேன். எனக்கும் அது பயன்பட்டிருக்கும். உடனே செயல்படுத்த வேண்டிய நல்லெண்ணத்தை நான் செயற்படுத்தாததில் எனக்கும் என்னைச் சார்ந்தவர்களுக்கும் நான் பயன்படாமல் போய்விட்டேன்.

அதுமட்டுமல்ல. தீயகாரியத்தை எப்போதும் ஒத்திப் போடவேண்டும். ஆனால் சூர்ப்பணகை வந்து "சீதாதேவி அழகின் சிகரம், உனக்கு ஏற்றவள்" என்று கூறியதும் உடனே அந்தத் தகாத காரியத்தை ஒத்திப்போடாமல் புறப்பட்டு சீதையை அபகரித்தேன்.

விளைவு அனைவருக்கும் நாசம், அதனால் நான் முடிவாகச் சொல்ல வேண்டியது, "நல்ல காரியத்தை உடனே செய்து முடிக்க வேண்டும். தீய காரியத்தைத் தள்ளிப்போட வேண்டும். அவ்வாறு தீயகாரியத்தைத் தள்ளிப் போடுவதால் தீயவற்றைச் செய்யாமல் இருக்கவும் வாய்ப்புண்டு". ★



### துவார பாலகர்கள் உணர்த்தும் தத்துவம்

கோவில் வாசலில் இருபுறமும் துவாரபாலகர்கள் வீற்றிருப்பர்.

துவார பாலகர்களில் ஒருவர் ஆள்காட்டி விரலைக் காட்டி நிற்பார்.

ஆள்காட்டி விரலைக் காட்டுவதன் தாத்பரியம் "கடவுள் ஒருவரே" என்பதை உணர்த்துவதாகும்.

மற்றொரு துவார பாலகர் கையை விரித்துக் காட்டுவார். அதன் தத்துவம் "கடவுளைத் தவிர வேறொன்றும் இல்லை" என்பதை உணர்த்துவதாகும்.

# தமிழிசை வளர்த்த சீர்காழி மூவர்





*பு.ஏ.இராமையா,* இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி,பண்பாடு மற்றும்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

பண்டைய தமிழகத்தில் மூன்று தமிழ்ச்சங்கங்கள் இயங்கி வந்தன எனவும், அவை இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழையும் வளர்த்து வந்தன எனவும் தமிழ் இலக்கியங்கள்



கூறுகின்றன. முதல் சங்கம் இயங்கிய காலத்தில் அகத்தியம், பரிபாடல், முது நாரை, முது குருகு, இசை நுணுக்கம் போன்ற இசை நூல்கள் இயற்றப் பெற்றன.

ஓரிரு நூற்பாக்களைத் தவிர பிற நூல்கள் கடல் கோளினால் அழிந்து போயின. இரண்டாம் தமிழ்ச் சங்கத்தில் இயற்றப்பட்ட நூல்கள் தொல்காப்பியம், கலி, குருகு, வியாழ மாலை முதலியன. அவற்றுள் தற்போது எஞ்சி நிற்பது தொல்காப்பியம் ஒன்றே. அறிவனார் இயற்றிய பஞ்சமரபு என்ற இசை இலக்கண நூலும் மதிவாணர் இயற்றிய நாடகத் தமிழ் நூலும் இயற்றமிழ் நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டும் கடைச்சங்க காலத்தில் இயற்றப் பெற்றவையாகும்.

தொல்காப்பியம் என்ற பழந்தமிழ் இலக்கியம் இலக்கண நூலாக இருந்தாலும் இசைக்கும் கூத்துக்கும் தொடர்புடைய பல குறிப்புகளைக் காட்டுகின்றது. உதாரணமாக

தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியோடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவெனமொழிப

என்ற நூற்பாவில் யாழ் என்ற இசைக் கருவியும், இசையும் ஒரு கருப்பொருளாகக் குறிப்பிடப்படுகிறது. அடுத்து

“அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்” என்ற நூற்பாவில் உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் தம் அளவின்மிகுந்து ஒலிப்பது இசை நூல்களின் கொள்கை எனக் குறிப்பிடுகிறார்.

இயற்பாவிற்கும், இசைப்பாவிற்கும் பொதுவாக ஓசை நயம் தருவது மோனை, எதுகை, இயைபுத் தொடைகளாகும். அவற்றைப் பற்றியும் தொல்காப்பியம் விளக்கமாகக் கூறிச் செல்கிறது.

ஆடற் கலைக்கு இன்றியமையாதது விறல் என்று அழைக்கப்படும் மெய்ப்பாடாகும், இந்த மெய்ப்பாட்டின் அடிப்படையில்தான் ஆடற்கலையே வளர்ந்து வந்திருக்கிறது. இக்கலையை நிகழ்த்திக் காட்டும் ஆடல் மகளிர் விறலியர் என்று அழைக்கப்படுவதும் நோக்கத்தக்கது.

கடைச்சங்க நூல்களான எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் போன்ற நூல்களில் இசை வளர்த்த பாணர்கள் பற்றியும் அவர்கள் பயன்படுத்திய இசைக் கருவிகளைப் பற்றியும் குறிப்புகள் ஏராளமாகக் காணப்படுகின்றன.

பாணர்கள் என்ற இசைமரபினர் யாழ், தூம்பு போன்ற இசைக் கருவிகளைப் பயன்படுத்தி மன்னர்கள் முன்பாகவும், வள்ளல்கள் முன்பாகவும் தமது இசைத் திறமையை வெளிப்படுத்தி அவர்கள் தரும் பொருளைக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்துள்ளனர். அவர்கள் ஒரு குழுவாகவே சென்று தங்கள் கலைத் திறனைக் காட்டிப் பரிசில் பெற்று வந்ததற்கு சிறுபாணற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை போன்ற நூல்கள் சான்று பகிர்கின்றன.

கடைச்சங்க காலத்தில் தோன்றிய இசை




நூல்களில் பஞ்சமரபும் ஒன்று. இது 240 வெண்பாக்களால் ஆனது. இந்த நூல் இசை, வாச்சியம், நிருத்தம், அவிநயம், தாளம் என்பவற்றைப் பற்றி விரிவாகக் கூறுகிறது. ஏழிசைகளில் இணை, கிளை, நட்பு, பகை, உறவு முறைகளைப் பற்றியும் இதில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. மேலும் நாற்பெரும் பண்கள் பிறக்கும் முறையும் கூறப்பட்டுள்ளது.

130 பண்களின் பெயரும் கூறப்பட்டுள்ளது. இசைப் பாக்களாகிய சிந்து, திரிபதை, சவலை, சமபாதம், செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, வண்ணம் ஆகியவற்றிற்கு இலக்கணம் எடுத்துக் காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளது. கூத்து இலக்கண மரபில் முழவின் எழுத்துக்கள், சொற்கள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. அவிநயமரபில் ஒற்றைக்கை, இரட்டைக்கை வகைகள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. வாச்சியமரபில் முழவு செய்வதற்குப் பயன்படும் மரத்தைப் பற்றியும், உலோகத்தைப் பற்றியும் அதன் அளவுகளைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன. இசைக்கும், ஆடலுக்கும் இன்றியமையாதது தாளமாகும். இந்தத் தாள மரபில் தாள உறுப்புகளுக்கு கால அளவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பகுதியில் 108 தாளங்களைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

சிலப்பதிகாரத்தில் அரங்கேற்றுக் காதையிலும் கானல்வரி, வேனிற்காதை, புறஞ்சேரியிருத்தக் காதை, ஊர்காண் காதை, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, நடுகற்காதை, வாழ்த்துக்காதை ஆகிய பகுதிகளில் இசையைப் பற்றியும் நாட்டியத்தைப் பற்றியும் விரிவாகக் கூறப்பட்டுள்து. அரங்கேற்றுக் காதையில் ஆடல் ஆசிரியர் இலக்கணம், இசை ஆசிரியர் இலக்கணம், கவிஞன் இலக்கணம், தண்ணுமை ஆசிரியர் இலக்கணம், குழல் ஆசிரியர் இலக்கணம், அரங்க இலக்கணம் ஆகியவை விரிவாகக் கூறப்பட்டுள்ளன. கானல் வரியில் உள்ள பாடல்கள் யாவும் இசைப் பாடல்கள். இளங்கோவடிகள் இந்தக் காப்பியத்தில் நாட்டுப்புறப் பாடல் வகையைச் சேர்ந்தவற்றிற்கு இலக்கிய வடிவம் தந்தமை போற்றுதற்குரியதாகும்.

பெருங்கதை என்ற நூலும் இசையினுடைய பெருமைகளை எடுத்து இயம்புகிறது. இந்த நூலிலும் யாழ், வீணை, குழல், வளை, வயிர், பறை, முழவு,தண்ணுமை, தடாரி, குடமுழா ஆகிய இசைக் கருவிகள் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.

கி.பி.4-5 நூற்றாண்டில் வாழ்ந்தவர் காரைக்காலம்மையார். இவர் இறைவனைப் பற்றி பாடிய நூல்கள் நான்கு. அவற்றுள் முதல்

## பன்னீர் இலை பிரசாதம்



திருச்செந்தூர் கோவிலில் சுவாமி பிரசாதமான விபூதியைப் பன்னீர் இலையில் மடித்துத் தருகிறார்கள்.

செந்தில் முருகன் தம் 12 திருக்கரங்களால் விசுவாமித்திர முனிவரின் காசநோய் தீர பன்னீர் இலை விபூதியை வழங்கினார்.

பன்னீர் இலையில் 12 நரம்புகள் இருப்பதைக் காணலாம்.

காசநோய்க்கு பன்னீர் இலையும், விபூதியும் இன்றும் அருமருந்தாகத் திகழ்கின்றது.

திருப்பதிகத்தை நட்டபாடைப் பண்ணிலும், இரண்டாம் பதிகத்தை இந்தளப் பண்ணிலும் பாடி உள்ளார். முதல் திருப்பதிகத்திலுள்ள பாடலில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் ஆகிய ஏழிசைகளைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். மேலும் இந்தப் பாடலில் ஆடலுக்கு இன்றியமையாதன இசையும், பாடலும் என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறார்.

பல்லவர் காலத்தில் அதாவது கி.பி. 574ல் பிறந்தவர் திருநாவுக்கரசர். "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" என்று இறைவனைப் பற்றி புகழ்ந்த போதும் இசையின் மேன்மையைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். நற்றமிழ் வல்ல திருஞான சம்பந்தர் இறைவனை "பண்ணமர் வீணையினான்" என்று வர்ணிக்கிறார். சுந்தர மூர்த்தி நாயனாரும் "ஏழிசையாய் இசைப்பயனாய்" என்ற அடியில் இறைவன் இசை வடிவமாக விளங்குகிறார் என்பதைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

## வேதங்கள் வேணுவனமானது

*வேதங்கள் நான்கும் மரங்களாய் நின்று இறைவனுக்கு நிழல்செய்து நித்தியமாயிருக்க வேண்டுமென்று இறைவனை வேண்டின. பெருமான் (திரு) நெல்வேலி வேணுவாயிருக்குமாறும் அவைகளுக்கு அடியில் தாம் திருமூலநாதராய் விளங்குவதாகவும் அருள்புரிந்தார்.*

நாலாயிரத் திவ்விய பிரபந்தம் என்னும் நூலில் ஏறத்தாழ மூவாயிரம் பாடல்கள் பண்ணமைந்த பாடல்களாகத் திகழ்கின்றன. தற்போது 29 பண்களில் அப்பாடல்கள் அமைந்துள்ளது காண முடிகிறது. ஏழொத்து, ஐந்தொத்து என்று தாளங்களின் பெயர்கள் காணப்படுகின்றன.

சோழர் காலத்தில் வாழ்ந்த சிவனடியார்கள் திருவிசைப் பாவைப் பாடி பெருமை பெற்றவர்கள். இவர்கள் பாடிய பதிகங்களும் இசைப் பாடல்களே. இப்பாடல்களில் அமைந்துள்ள பண்கள் பஞ்சமம், காந்தாரம், புறநீர்மை, சாளரபாணி, நட்ட ராகம், இந்தளம் ஆகியவை. திருவிசைப்பாவில் யாழ், குழல், வீணை, துந்துபி, மொந்தை, முழவம், கிண்ணரம் ஆகிய இசைக் கருவிகளின் பெயர்கள் காணப்படுகின்றன.

கி.பி. பனிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் சேக்கிழார். அவரால் பாடப்பட்ட நூல்தான் பெரியபுராணமாகும். அப்புராணத்தில் கூறப்பட்டள்ள நாயன்மார்களில் ஆனாயநாயனார் என்பவர் வேய்ங்குழலூதி இசை வளர்த்த பெருமைக்குரியவர் ஆவார்.

"முத்திரையே முதலிணைந்து முறைத்தானம் சோதித்து
வைத்த துளை ஆராய்ச்சி வக்கரணை வழிபோக்கி
ஒத்த நிலை உணர்ந்த பின் ஒன்றுமுதல் படிமுறையாம்
அத்தகைமை ஆரோசை, அமரோசை களினமைத்தார்".

குழலில் உள் முத்திரை தானத்தை அமைத்துத் கொண்டு மற்ற தானங்களையும் சோதித்து அவை ஒத்து வருகின்ற நிலையை உணர்ந்த பின் ஆரோசை, அமரோசை வாசித்தார். அதன் வழியே முதல் பண்ணாகிய வெம்பாலைப்பண் வாசித்தபின் ஐந்திசைப் பண்ணாகிய முல்லைப் பண்ணை இசைத்தார். அதன்பின் இளியைக் குரலாக் கொண்டு பண்ணுப் பெயர்த்தல் முறைப்படி கோடிப் பாலையை வாசித்தார். இக்கருத்தை

"மாறுமுதல் பண்ணினபின் வளர்முல்லைப் பண்ணாக
ஏறியதா ரமும்முழையும் கிழமைகொள விடுந்தானம்
ஆறுலவும் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசைப் பெருகக்
கூறிய பட்டடைக் குரலாம் கோடிப்பாலை யினிறுத்தி"

என்ற பாடலில் தாய், சேய் (அரிகாம்போதி, மோகனம்) பண்களின் தொடர்பும் குரல் திரிபினால் பிற பண்கள் உருவாவதையும் காணலாம்.

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர் பல சந்தங்களில் திருப்புகழ் பாடல்களைப் பாடி உள்ளார். இந்தப் பாடல்களில் சந்தங்களுக்கு ஏற்ற தாள அமைப்பும் இசை நயமும் இணைந்து காணப்படுகின்றன.

தொடரும்...

## புகழ்பெற்ற நைவேத்தியங்கள்

| | |
|---|---|
| பிள்ளையார்பட்டி | மோதகம் |
| பழநி | பஞ்சாமிர்தம் |
| சிதம்பரம் | களி |
| திருப்பதி | லட்டு |
| காஞ்சிவரதர் | இட்டிலி |
| அழகர் கோயில் | தோசை |
| வைத்தீஸ்வரன் கோயில் | தினைமாவு |
| சபரிமலை | நெய் |
| திருக்கண்ணபுரம் | முனையதரன் பொங்கல் |
| ஸ்ரீரங்கம் | அரவணை |

# மகாபாரதம்

முனைவர் த.அமிர்தலிங்கம்

8

கர்ணன் பிறக்கும் போதே மார்பில் கவசமுடனும் காதுகளில் கனக குண்டலங்களுடனும் சூரியனின் அமிசமாக சூரியனின் புத்திரனாகப் பிறந்தவன். அம்மார்புக் கவசமும், கனக குண்டலங்களும் கர்ணனிடம் திகழும் வரை, எத்தனைக்காலம் போர் செய்தாலும் அவனைப் பாண்டவர்கள் வெற்றி கொண்டுவிட முடியாது என்பது மட்டுமல்ல, அர்ச்சுனனும் கர்ணனால் கொல்லப்பட்டு விடுவான். அர்ச்சனனின் உயிரைக் காப்பதோடு, அறம் நிலைக்க பாண்டவர்களை வெற்றி பெறச் செய்வதற்காகவே, கண்ணன் அவதாரம் செய்திருக்கிறார்.



விதுரனின் விஷ்ணு வில்லை ஒடிக்கச் செய்து, துரியோதனனின் வெற்றி வாய்ப்பைக் குறைப்பதற்குக் கண்ணனின் சூழ்ச்சித் திறமே பெரிதும் பயன்பட்டது. இப்போது பாண்டவர்களின் வெற்றிக்கு மேலும் தடையாக இருப்பன கர்ணனின் மார்பு கவசமும், கனக குண்டலங்களும்.

இவற்றைப் பறித்தால் அன்றி துரியோதனனை ஜெயம் கொள்வது என்பது நடக்க முடியாத ஒன்று. கர்ணனை துரியோதனனிடமிருந்து பாண்டவர் பக்கம் சேர்த்துவிட்டால், வெற்றி பாண்டவர்களுக்கென்பது நிச்சயம். அதனால்தான் கண்ணபெருமானும், கர்ணன் பாண்டவர்களுக்கு உடன் பிறந்த மூத்தவன் ஆவதை உணர்த்தி "வந்தினி தம்பியர் தம்மொடு சேர்க" என அறிவுறுத்தியும் பார்த்தார். ஆனால் கர்ணனோ, செஞ்சோற்றுத் தருமமே பெரிது எனக் கூறி, கண்ணனின் அறிவுரையை ஏற்க மறுத்து விட்டதைப் பார்த்தோம்.

இப்படிப்பட்ட ஒரு நிலையில், கர்ணனின் வலிமையைக் குலைக்க, அவனுடன் ஒட்டிப் பிறந்த மார்புக் கவசத்தையும், காது குண்டலங்களையும் பறிப்பதல்லால் வேறு வழியே இல்லை என்பது கண்ண பெருமானுக்குத் தெரிகிறது. மாவீரன் ஆகிய கர்ணனிடம் வீரத்தைத் துணைக் கொண்டு அவைகளைப் பறித்துவிடவும் முடியாது. வேறு என்ன தான் வழி என்பதாகச் சிந்திக்கும் கண்ண பெருமான் கர்ணனின் கொடை உள்ளத்தையே பயன்படுத்தி எந்த ஒரு சிரமமும் இல்லாமல் யாசித்தே அவைகளைப் பெற்றுவிட முடியும் என்று முடிவு செய்து கர்ணனிடம் யாசித்துக் கனக குண்டலங்களைப் பெறும் பணிக்காகத்தான் இந்திரனைத் தான் இருக்கும் இடத்திற்கு அழைக்கிறார். அவனும் வநது வணங்கி நிற்கின்றான்.

இந்திரன் தேவர்களுக்கெல்லாம் தலைவன். கேட்டதெல்லாம் கொடுக்கும் கற்பகத்தருவும் காமதேனுவும், அவன் வசம் இருக்கின்றன. முப்பத்து முக்கோடி தேவர்களுக்குத் தலைவன் ஆகிய இந்திரனை, கர்ணனிடம் போய் யாசித்துக் கவசகுண்டலங்களைப் பெற்று வரக்கூறினால்

## வீடு கற்பிக்கும் பாடம்



வீட்டில் முதலில் இருப்பது '**படி**'
அது நம்மைப் படிக்க வேண்டும் எனக் கூறுகிறது.
அடுத்து இருப்பது '**நடை**'
நாம் படித்தபடி நடக்க வேண்டும் என்று சொல்லுகிறது.
அடுத்து இருப்பது '**கூடம்**'
நாம் கூடி வாழ வேண்டும் என்று அது அறிவுறுத்துகிறது.
பக்கத்தில் '**முற்றம்**' உள்ளது
இலட்சியம் முற்றுப் பெற்றால் மோட்சம் கிட்டிவிடும்.
இதுவே வீடு கற்பிக்கும் வீடுபேறு எனும் பாடம் ஆகும்.

அவன் அதற்கு ஒப்புவானா என்றால் அவன் ஒப்பமாட்டான். வெறும் தேவர் தலைவனான இந்திரனாக மட்டுமே இருந்தால் அவன் ஒப்புக்கொள்ளத்தான் மாட்டான். ஆனால் அவனோ அர்ச்சுனனுக்குத் தந்தை. துருவாச முனிவர் உபதேசித்த மந்திரத்தின்படி குந்திக்கு அர்ச்சுனனை மகனாகத் தந்தவன்தான் இந்திரன், கர்ணனிடம் போய் யாசிக்க ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.

மேலும், கர்ணனிடம் அர்ச்சுனனின் உயிர்கொல்லும் நாகாத்திரம் போய் அடைக்கலம் பெற்றுத் தங்கி இருப்பதற்கும் காரணமாக அமைந்துவிட்டவனும் இந்திரன்தான்.

அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரியூட்டிய போது தன் நண்பன் தக்ககனின் மகனாயிற்றே என்று பரிதாபப்பட்டு, அசுவசேனன் என்ற நாகத்தைக் காப்பாற்றினான். அந்த நாகமோ தன் பெற்றோரைக் கொன்ற அர்ச்சுனனைப் பழி வாங்குவேன் என்று சபதம் பூண்டு, கர்ணனிடம் போய் அடைக்கலம் கோரி, நாகாத்திரமாக அமைந்துள்ளது. ஆகவே அன்று நாகத்தைத் தப்பவிட்டு, அர்ச்சுனன் உயிர்க்கு கேடு சூழ்ந்த இந்திரனே, அந்நாகாத்திரம் தஞ்சம் கொண்டு விளங்கும் கர்ணனிடம் போய், கர்ணனின் உயிருக்குக் காவலாகவும், அர்ச்சுனனுடைய உயிருக்கு எமனாகவும் விளங்குகின்ற கவசகுண்டலங்களை யாசகமாகக் கேட்டுப் பெற்று வரவேண்டும் என்பது கண்ணபெருமான் செய்த முடிவு.

ஆகவேதான், இந்திரன் வந்ததும் முதலில் அவன் காண்டவன தகனத்தின் போது நாகத்தைத் தப்பவிட்ட குற்றத்தைப் பக்குவமாக எடுத்துக் காட்டுகிறார் கண்ணபெருமான்.

"கிரியின் சிறகை யரி படையோய் கேண்மோ!
ஆண்மைக்களமீதில்
வரிவெஞ் சிலைக்கை விசயனுக்கு மாறாய்
முனிந்து வருகின்ற
எரியுங் கனல்வாய் விட அரவு ஒன்று
இவனுக்குப்பகையான
அரியின் புதல்வன் தனக்கொரு பேரம்பாகியது
யாரறியார்"
(கிருட்டிணன் தூது 232)

"அர்ச்சுனனுக்கு மிகவும் பகைவனாக விளங்கும் சூரியனுடைய மகன் கர்ணனிடம் கொடிய பாம்பு ஒன்று அம்பாக மாறி அமைந்திருப்பதை அவனியில் யார்தான் அறியமாட்டார்கள்" என்று கூறும் கண்ணபெருமான், "அந்தப் பாம்பைத் தப்ப வைத்து நீ தானே அந்தக் குற்றத்தைப் புரிந்தாய்" என்பதையும் கூறாமலே கூறி விடுகிறார்.

அன்றைக்கு அந்தக் குற்றத்தைச் செய்த நீதான் இன்றைக்குக் கர்ணனிடம் போய் கவச குண்டலங்களையும் யாசித்துப் பெற்று வரக் கூடிய பரிகாரத்தையும் செய்ய வேண்டும். "நான் அமரர் தலைவன், அமர்ந்த இடத்திலேயே எல்லாம் தரக் கூடிய கற்பக மரமும், காமதேனுவும் கொண்டவன். நான் போய் யாசிப்பதா?" என்று இந்திரன் நினைக்கவும் கூடும் என்பதால், அவன் மைந்தன் அர்ச்சுனனைக் காப்பாற்ற வேறு வழியே இல்லை என்பதையும் கண்ணபெருமான்,

## திருக்கல்யாணம்



ஆண்டவன் நித்யகலியாண ரூபி. நமக்கு ஓராண்டு என்பது தேவர்களுக்கு ஒருநாள். ஆதலால் ஆண்டுக்கொரு திருக்கல்யாணம் நடத்துவது தினமும் நடத்துவதாகும். தினமும் நடத்துவது தெற்காக எனில் சிவத்திினிடமிருந்து சக்தி பிரியாது. அம்மை அப்பராம் போக வடிவம் கொண்டு அருள் செய்வதினாலேயே நாம் உயர்கின்றோம் என்கின்ற நன்றியறிதலைக் காட்டுவதற்கு ஆண்டுக் கொருமுறை திருக்கல்யாண வைபவம் நடத்தப்படுகிறது.

## திருவரங்கத் திருப்பதியில் வைகுண்ட ஏகாதசித் திருவிழா

| | |
|---|---|
| 11.12.2004 | திருநெடுந்தாண்டகத்துடன் தொடக்கம். |
| 21.12.2004 | மோகினி அலங்காரம். |
| 22.12.2004 | வைகுண்ட ஏகாதசிப்பெருநாள் |
| 28.12.2004 | திருக்கைத்தலச் சேவை |
| 29.12.2004 | வேடுபறி உற்சவம் |
| 31.12.2004 | தீர்த்தவாரி |
| 01.01.2005 | புத்தாண்டில் நம்மாழ்வார் மோட்சம் |

அரங்கன் ஆழ்வார்கள் அருள்பெறுவோம்.
செல்வோம் ஸ்ரீரங்கம்!
பணிவோம் அரங்கனை!!

**"மைந்தற்குறுதி நீ வேண்டின் வல்லே முனிவர் வடிவாகி**
**சந்தப்பனுவல் இசைமாலை தானாகரனை விரைந் தெய்தி**
**அந்தக்கவச குண்டலங்கள் அளிப்பாய் என்றால் அவனொன்றும்**
**இந்தப்புவியில் மறுத்தறியான் உயிரே எனினும் ஈந்திடுவான்"**

*(கிருட்டிணன் தூது 236)*

என்பதாகக் கூறுகிறார். இந்திரன் சுய உருவில் போக நிச்சயம் நாணங்கொள்ளக் கூடும் என்பதனால்தான் முனிவராக உருமாறிப் போய் யாசிக்கச் சொல்லுகிறார் கண்ணபெருமான்.

கர்ணனின் கொடைத்திறத்தை கண்ணபெருமான் மனம் திறந்து இந்திரனிடத்தில் இந்த நேரத்தில் எடுத்துக் கூறிப் பாராட்டுகின்றார். உலகத்திலே இருக்கின்ற எந்தப் பொருளேயாயினும், அதனைக் கர்ணன் கொடுக்க மறுக்க மாட்டான். கர்ணனுடைய உயிரையே தரும்படிக் கேட்டாலும் மகிழ்ச்சியாகக் கொடுத்து விடுவான். இன்னாருக்குத்தான் தானம் புரிவது என்ற வரன்முறை கர்ணனிடம் கிடையாது. அவன் கலைஞர்களுக்கு வழங்குகின்றான். முனிவர்களுக்கு வழங்குகின்றான். தேவர்களுக்கும் வழங்குகின்றான். துறவிகளுக்கும் வழங்குகின்றான். தம் குறையைத் தேடி வந்து சொல்பவர்களுக்கு வழங்குவதோடு சொல்லாதவர்களுக்கும் வழங்குகின்றான்.

எல்லோருக்கும் வாரிவாரி வழங்கக் கூடிய அரிய கொடை வள்ளல் கர்ணன் ஒருவனே என்பதாக கர்ணனின் கொடைப் பெருமையை கண்ணபெருமான் எடுத்துக் கூறி "போய் நீ கேட்டு கர்ணனிடத்தில் கவசகுண்டலங்களைக் கவர்ந்து வா; தொகை தொகையாகத் தேர்களை ஊர்ந்து பூலோகத்திலுள்ள அரசர்கள் எல்லோரும் ஒரு சேர திரண்டு வந்தாலும், உன் மகன் அர்ச்சுனன் அவர்களையெல்லாம் வென்று புகழ் கொள்ளுமாறு நான் செய்கிறேன்" என்று உறுதியளித்தவுடன், மைந்தனுக்கு உறுதி வேண்டி, இந்திரனும் கிழ அந்தணன் வடிவம் கொண்டு கர்ணனின் அரண்மனை வாயிலைப் போய் அடைகிறான்.

கங்கை நீரின் நுரைபோல் முடிவெளுத்து முகம் சுருங்கிய வயோதிகத் தோற்றத்துடன் கையிலே தடியூன்றியவனாய் இந்திரன் வேடம் பூண்டு, கர்ணனின் மாளிகையை அடைகிறான். "இரவலர் சொல்லாடப் போம் உயிர்" என்பார் வள்ளுவர். மானமுள்ள மனிதன் ஒருவன், தனக்கு ஒன்று வேண்டும் என ஒருவரைப் போய் அடைந்து ஒரு சொல் சொல்வதற்குள் அவனுடைய உயிரே அவனை விட்டுப் பறப்பது போன்ற பெரும் துன்பம் நேரும் என்பதைத்தான் வள்ளுவனார் தம் குறளில் கூறியுள்ளார்.

தனக்காக அல்லாமல் தான் வளர்க்கும் பசுவிற்காகக் கூட, எளிதில் கிடைக்கக் கூடிய தண்ணீரையும் இரக்கக் கூடாது என்பார் வள்ளுவர். மனிதரினும் மேம்பட்ட தேவர்களுக்கெல்லாம் தலைவனாகியவன் இந்திரன்; யாசகம் கேட்கும் பொருட்டு வேடம் பூண்டு கர்ணனின் வாயிலை அடைந்த அவனுடைய முடி கங்கை நுரைபோல் வெளுத்ததற்கும், முகத்தில் சுருக்கங்கள் விழுந்தமைக்கும் காரணம், அவன் தனக்கு இத்தகைய நிலை ஏற்பட்டதே என்று எண்ணிய கவலையால் ஏற்பட்டதாகவும் கூட இருக்கலாம். ஆகவே தான் இராஜநடை நடக்க வேண்டிய இந்திரன், நடக்க முடியாமல் தள்ளாடி, கூன்விழுந்த முதுகு மேலும் சாய்ந்து, தான் கீழே விழுந்து விடாமல், தடியூன்றியவனாய் கர்ண மாமன்னனின் வாயிலை அடைந்து வாயிற் காவலனை ஏறிட்டுப் பார்க்கிறான்.

(தொடரும்)

## லிங்கத்திற்குப்பதில் பெருமாள்

வடாற்காடு மாவட்டத்தில் திருப்பாற்கடல் எனும் சிற்றூர் உள்ளது. இங்குள்ள கோவிலில் ஆவுடையார் மீது லிங்கத்திற்குப் பதில் பெருமாள் நின்ற நிலையில் காட்சியளிக்கிறார். இந்த காட்சி "அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவர் வாயில் மண்ணு" என்பதை உணர்த்துகின்றது.

# திருமந்திர உபதேசம்

'திருமந்திரச் செம்மல்'
**டி.வி.வெங்கட்டராமன்,** இ.ஆ.ப.(ஓய்வு)





இறைவன் நமது புலன்களுக்குப் புலப்படுவதில்லை. புலனறிவு சிற்றறிவாகும். புலனறிவைக் கொண்டு பேரறிவைக் காண இயலாது. சிற்றறிவு என்பது ஓர் சிறிய வட்டமாகும். நாம் எல்லோரும் அந்த வட்டத்தின் வரம்பிற்குள் இருக்கின்றோம். பேரறிவானது எல்லையற்றது. வரம்பற்றது. ஆறு ஆனது கடலில் கலந்து மறையலாம். ஆனால், கடல் ஆற்றில் மறைந்து போவதில்லை. சிற்றறிவு பேரறிவிலே சங்கமம் ஆகலாம். 'அறிவு அறிவுள்ளே அழிந்தது போல' என்பார் திருமூலர். ஆனால் பேரறிவுக்குச் சிற்றறிவினால் ஈடுகட்ட இயலாது.

சிற்றறிவைப் பெற்றுள்ள நமது நிலைமை கிணற்றில் வசிக்கும் ஆமையின் நிலைமையைப் போன்றதாகும். கிணற்று ஆமை கடலில் வசிக்கும் ஆமையைப் பார்த்து 'உங்கள் கடல் எங்கள் கிணற்றுக்கு ஒப்பாகுமோ?' என்று கேட்டால் அது அந்தக் கிணற்று ஆமையின் அறியாமையைத் தானே குறிக்கும்! வினைகளால் உந்தப்பட்டு நாம் நமது வாழ்க்கையை நடத்தி வருகின்றோம். அறிவை விட அறியாமை என்கின்ற அடிப்படையில் தான் நம்முடைய வாழ்க்கை நடந்து வருகின்றது. இந்த அறியாமையைப் பெருக்க நாம் மேலும் மேலும் செய்யும் வினைகள் வித்திட்டு வருகின்றன. அந்த நிலையில் நம்மில் பலர் கடவுளே இல்லை என்று சொல்லி நம்முடைய மனதில் இருந்து அந்த எண்ணத்தையே விலக்கி விடுகின்றோம். வேறு பலர் இறைவனைக் காண்பது அரிது என்று சொல்லி அவனைக் காண தாம் மேற்கொள்ள வேண்டிய முயற்சிகள் பயன்தராது என்று சொல்லியும் நம்மை நாமே திருப்தி செய்து கொள்கின்றார்கள். இது என்ன பேதமை? என்கிறார் திருநாவுக்கரசர்.

"கூவல் ஆமை குரைகடல் ஆமையைக்
கூவ லோடுஒக்கு மோகடல் என்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரிது என்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே"

உண்மையில் இறைவனுடைய அருட் சக்தியே இந்த வினைகளைச் செய்ய வைக்கின்றது. பாசத்தைக் கொடுக்கின்றது. உயிரை மலங்களோடு சேர்த்து வைக்கின்றது. இறைவனுடைய மறைப்புச் சக்தி காரணமாக நாம் இறைவனை அறிவதில்லை. இறைவன் நம்மிடமிருந்து மறைந்து நிற்கின்றான். நம்முடைய கண்கள் புறப்பொருட்களைப் பார்க்கும் ஆற்றலைப் பெற்றிருக்கின்றன. ஆனால், நம்முள் நிற்கும் இறைத் தன்மையை காண முடிவதில்லை.

"கண் ஒன்று பல காணும், தனைக்காணா;
அண்ணலும் இவ்வண்ணம் ஆகி நின்றானே"
என்கிறார் திருமூலர். எனவே தான் இறைவனை மறைபொருள் என்று குறிப்பிடுவது உண்டு. இந்த



**யானை முகம் :** யானையின் குரலொலி உலகில் உண்டாகும் மற்ற எல்லா ஒலிகளைக் காட்டிலும் ஓங்காரப்பிரணவ ஒலியை நன்கு ஒலிப்பதால் யானை முகம் விநாயகருக்கு அமைந்துள்ளது.

மறைபொருள் புலனறிவுக்கு அப்பாற்பட்டது. இன்னதென்று சொல்லிக் குறிப்பிட்டு உணர்த்த இயலாது. இறைவன் மறைபொருளான காரணத்தினால் அவனை எழுத்தாலோ, வாக்காலோ கட்டுப்படுத்த முடியாது. இதைத்தான் திருமூலர்

"காட்டுங் குறியும் கடந்தவர் காரணம்
காட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்"
(திரு மந்திரம் 2937)

என்பார்.

பரம்பொருளைப் பொறுத்தவரை நம்முடைய அறிவு ஒரு எல்லைக்கோட்டில் நின்று வருகிறது. அந்த எல்லைக் கோட்டைத் தாண்ட நாம் அறிவைக் கொண்டு எடுக்கும் முயற்சிகள் வெற்றி பெறாது பரந்த, விரிந்த கடலின் மற்றொரு கரையை நாம் கண்களாலேயே கண்டுகொள்ள முடியுமா? கரையற்ற பெரும் வெள்ளம் அடித்து வரும்போது அதனுடைய கரையைக் காண்பது மிகவும் கடினம் அல்லவா? அதேபோல் உரையற்ற இறைவனுடைய தன்மையை நம்முடைய புலனறிவினால் மட்டும் கண்டு கொள்ள முடியாது.

"உரையற்ற தொன்றை யுரை செய்யுமூடர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ"
(திருமந்திரம் 2955)

நமது அறிவுக்கு எட்டாத பரம்பொருளை மறைபொருள் என்கிறோம். ஆனாலும் இறை என்னும் உண்மையைத் திருமூலரைப் போன்ற மகான்கள் முழுமையாக அனுபவித்தவர்கள். அவ்வாறு அனுபவித்த திருமூலர் இறைவனை அனைத்து உலகுக்கும் தலைவனாகக் காண்கின்றார். உயிருக்கு உயிராய், உயிர்களின் அறிவில் பொருந்தியிருத்தலைக் காண்கின்றார். அண்டத்தில் உலகெங்கிலும் நிறைந்து நிற்பதைக் காண்கின்றார். உள்ளத்தில் தியானப் பொருளாக விளங்கி நிற்பதை அனுபவிக்கின்றார். இறைவனுடைய அருளின் தன்மையை உணருகின்றார். பொய்மை நிறைந்த உடலில் உயிர்ப்புச் சக்தியாக உட்புகுந்து வெளிவருதலைக் காண்கின்றார். மற்றவர்கள் இந்த உண்மையைத் தெரிந்து கொள்ளவில்லையே என்றும் நினைத்துக் கொள்கின்றார்.

"உள்ளத்து ளேதான் உகந்தெங்கும் நின்றவன்
வள்ளற் றலைவன்; மலருறை மாதவன்;
பொள்ளற் குரம்பைப் புகுந்து புறப்படும்
கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே"

(திருமந்திரம் 1531)

கள்ளத் தலைவன் என்னும் சொல் எத்துணைக் கருத்துக்களை உள்ளடக்கி வைத்துள்ளது! இறைவன் சகல உயிர்களுக்கும் தலைவன் தான். "தானே உலகில் தலைவனெனத் தகும்; தானே உலகுக்கு ஓர் தத்துவமாய் நிற்கும்" என்கிறார் திருமூலர். எனினும் அவன் ஓர் கள்ளத் தலைவன். நம்மால் அறியப்படாது அவன் நிற்பதால் இவ்வாறு அழைக்கப்படுகின்றான்.' அவன் நம்மிடமிருந்து மறைந்து நிற்பதால் மட்டும் அவன் நம்மிடையே இல்லையென்று சொல்லிவிட முடியாது. இதைப் பற்றிச் சற்றுச் சிந்தித்துப் பாருங்கள் என்கிறார் திருமூலர்.

'இறைவன் உள்ளத்திலும் இல்லை, வெளியிலும் இல்லை என்று நீங்கள் நினைத்தால் உங்களுடைய மனதில் அந்த எண்ணமே உண்மை என புலப்பட்டுக் கொண்டிருக்கும், பரம்பொருளானது உங்களுடைய எண்ணங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்டது' என்கிறார் திருமூலர்.

"உள்ளத்தும் உள்ளன், புறத்துளன் என்பவர்க்
குள்ளத்தும் உள்ளன்; புறத்துளன் எம்மிறை;
உள்ளத்தும் இல்லை; புறத்தில்லை என்பவர்க்
குள்ளத்தும் இல்லை; புறத்தில்லை தானே"

(திருமந்திரம் 1532)

★

## காசியினும் வீசம் அதிகம்

காசியை விட வீசம் அதிகம் என்ற பெருமை கொண்டது விருத்தாசலம்.

இங்கு இறப்பவர் உயிரைப் பார்வதி தம் தொடையில் இருத்திப் புடவைத் தலைப்பால் வீசி இளைப்பாற்றுவார்.

சிவ பெருமான் ஐந்தெழுத்தோதி முத்தி அருள்வார்.

இவ்வாலயம் டில்லிப் பேருந்து நிலையத்திலிருந்து சுமார் 20 கி.மீ. தூரத்தில் ராமகிருஷ்ணாபுரம் பகுதியில் அமைந்துள்ளது.

சிறு குன்றின் மேல் அமைந்துள்ள இவ்வாலயத்தை உத்தரசுவாமி மலை (மலை மந்திர்) எனும் திருபெயரால் அழைக்கின்றனர். இவ்வாலயத்தோடு, ஸ்ரீ கற்பகவிநாயகர், ஸ்ரீ தேவி மீனாட்சி சமேத ஸ்ரீ சுந்தரேஸ்வர் சந்நிதிகள் அனைத்தும் சுவாமிநாதமூர்த்திக்குக் கீர்த்தி சேர்ப்பதாகவே அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.



இவ்வாலயம் முழுமையும் தென்னாட்டு சிற்பக்கலைப்பாணியில், வடநாட்டில் நிறுவப்பட்டுள்ளதைக் காணும் தோறும் தென்னாட்டு ஆலயங்களில் இருப்பது போன்ற உணர்வை நாம் உணர முடிகிறது.

இவ்வாலயம், பல தலங்களில் இருந்து வரும் அடியார்கள் யாவருக்கும், தென்னாட்டின் திருவேரகப்பதியை நினைவூட்டுவதாக உள்ளது. மலை உச்சியில் இருந்து பார்த்தால் டில்லி மாநகரின் உயர்ந்த கட்டிடங்களின் எழிலை இயற்கைக் காற்றோடு அனுபவிக்க முடியும்.

சுவாமிநாதனைத் தரிசித்ததும்

"சிவனார் மனங்குளிர உபதேச மந்திரம்
இருசெவி மீதிலும் பகர்ந்ததை
சிறியேன் தனக்கும் உரைசெயில் சற்றும்
குருத்துவம் குறையுமோ"

என அருணகிரியார் மனம் உருகி இறைஞ்சிக் கேட்கிறார்.

இங்கு அருள்மிகு கற்பக விநாயகர், அருள்மிகு தேவி மீனாட்சி சமேத அருள்மிகு சுந்தரேஸ்வரர் கர்ப்பகிரகங்கள் யாவும் பாண்டிய நாட்டுக் கலைப்பாணியில் சிற்பிகளால் உருவாக்கப்பட்டுள்ளது.

மலை அடிவாரத்தில் கலா மண்டபம், யாவருடைய மனதையும் ஈர்க்கும் வண்ணம் அமைந்துள்ளது. நவகிரகங்கள் சன்னதியும் ஆதி சங்கரர் கலைக்கூடமும், மலைக்கு நடுவே அமைந்துள்ளது.

இம் மண்டபத்தில் கலை நிகழ்ச்சிகளும், ஆன்மீகச் சொற்பொழிவுகளும் நடை பெறுகின்றன. இங்கு அமர்ந்து தியானமும் செய்யலாம்.

### பள்ளியறை

*இறைவனும் அவன் சக்தியும் பிரிந்திருப்பது கூடாது; ஒன்று சேர்ந்தே விளங்கவேண்டும்' என்பதற்காகவே அம்மை வேறு அப்பன் வேறாக வைத்து வணங்கியபோதும், பூஜை முடிவில் ஒன்று சேர்த்து வணங்கு கின்றார்கள்.*

இத்தகு புகழ்வாய்ந்த மலைமந்திர் எனும் சுவாமி நாத சுவாமி திருத்தலத்தை நம் வாழ்வில் நாமும் ஒருமுறை தரிசனம் செய்து முருகப் பெருமானின் பாததீட்சை பெற விழைவோமாக!. ★

# மலைமந்திர் எனும் உத்தர சுவாமி மலை

திருப்புகழ் மாமணி
மு. அருணகிரி

# சமயங்கள் வலியுறுத்தும் சமூகநல்லிணக்கம்



**டாக்டர் வை.பழனிச்சாமி,**
எம்.ஏ.பி.எல்., பி.எச்.டி,இ.ஆ.ப(ஓய்வு)
தமிழ்நாடு மாநிலத் தேர்தல் ஆணையாளர்
சென்னை.

சமூக நல்லிணக்கம் தான் நம்முடைய சமயங்களின் உண்மை இலட்சியம் ஆகும்.

**"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு"** என்ற ஒப்பற்ற தத்துவத்தையே நம்முடைய சமயங்களும், சமயச் சான்றோர்களும் வற்புறுத்தி வந்துள்ளார்கள்.

**"ஒன்றே குலம், ஒருவனே தேவன்"** என்று மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே முழங்கினார் ஒரு சித்தர் - **திருமூலர்.**

**"யாதும் ஊரே யாவரும் கேளிர்"** என்று கொள்கை முழக்கம் செய்தார் **கணியன் பூங்குன்றனார்** எனும் புலவர் புறநானூற்றிலே.

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்"** என்பது **திருவள்ளுவர்** வேதம்..

**"சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்!**
**கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்"**
என்று கேள்விகள் எழுப்பினார் திருநாவுக்கரசர்.

**திருஞானசம்பந்தர்** வேதியர் குலத்து உதித்தவர், மூன்று வயது குழந்தையாக இருந்தபோது "அம்மையே அப்பா" என அழுது, பார்வதி கொடுத்த ஞானப்பால் குடித்துத் தேவாரம் பாடியவர்.

தம்முடைய தேவாரத்திற்கு யாழிசை மீட்ட அவர் உற்ற தோழராய்க் கொண்டிருந்தவர் **திருநீலகண்டத்து யாழ்ப்பாணர்.**

பாணர்கள் அன்றைக்குத் தாழ்த்தப்பட்ட மக்களாகக் கருதப்பட்டார்கள். ஆனால் "இறைவன் முன்னால் எல்லோரும் சமம்" என்ற கொள்கையை வலியுறுத்த வந்த திருஞானசம்பந்தர் திருநீலகண்டத்து யாழ்ப்பாணரைத் "தோழர்" எனக் கொண்டார்; "ஐயரே!" என்று அவரை அழைத்துச் சிறப்பித்தார் என்பதை அவருடைய வரலாற்றில் படித்து மகிழ்கின்றோம்.

திருநீலநக்கர் என்கிற வேதியர் வீட்டிற்குச் செல்கிறார்கள். திருஞானசம்பந்தருடன் வந்த பரிவாரங்கள் அனைவருக்கும் தங்குவதற்கு இடம் ஏற்பாடு செய்யப்படுகின்றது. திருநீலகண்டத்து யாழ்ப்பாணருக்கும், அவருடைய துணைவியாருக்கும் தங்க இடம் தருமாறு திருஞானசம்பந்தர் கேட்டுக் கொள்கின்றார். திருநீலநக்கர் யாகக் குண்டத்திற்கு அருகிலே திருநீலகண்ட யாழ்ப்பாணரையும், அவர்தம் துணைவியாரையும் தங்கிக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கின்றார்.

தாழ்த்தப்பட்டவர்கள் தம்மருகே படுப்பதா என யாகக் குண்டத்துத் தீ கோபிக்கவில்லை. தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் வகையில் யாகக் குண்டத்து தீ வலம் சுழித்து முன்னிலும் பிரகாசமாய் சுடர்விட்டு எரிந்தது என்று சேக்கிழார் கூறுகின்றார். ஆகவே எல்லோரும் இறைவனின் பிள்ளைகள், அடியார்களிடம் பேதம் இல்லை. இதைத்தான் நம்முடைய சமயங்கள் வலியுறுத்துகின்றன.

**"எல்லோரும் ஓர் குலம்**
**எல்லோரும் ஓரினம்**
**எல்லோரும் இந்நாட்டு மன்னர்"**

என்று இன்றைக்கு மகாகவி பாரதியார் சொன்ன கருத்தை ஆயிரத்திநூறு ஆண்டுகளுக்கு முன்பே சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரத்தில் சொல்லியிருக்கிறார்.

சுந்தரமூர்த்தி நாயனாருடைய உயிர்த் தோழர் **சேரமான் பெருமாள் நாயனார்.** இவர்

திருவஞ்சைக் களத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட முடிமன்னர், பேரரசர்.

அரசனும், ஆண்டியும் சமம் என்பதை நம்முடைய சைவசமயம் உணர்த்துகின்றது.

பட்டத்து யானைமேல் நகர்வலம் வருகிறார் சேரமான் பெருமாள் நாயனார். வழியிலே ஒரு வண்ணான் தலையில் சலவை செய்யும் தன் பணிக்காக உவர்மண்ணை மூடையாகக் கட்டித் தலையில் வைத்து வந்து கொண்டு இருக்கிறார். அப்போது மழை பெய்தது. பெய்த மழைநீரில் உவர் மண் நனைந்து திட்டு திட்டாக வண்ணான்மேல் படிந்து இருந்தது. பார்ப்பதற்கு வண்ணான் திருநீறு பூசிய சைவ அடியார் போலக் காட்சி கொடுத்துக் கொண்டு இருந்தார்.

பட்டத்து யானைமேல் வந்து கொண்டு இருந்த சேரமான் பெருமாள் நாயனார், வண்ணாரை அடியார் என எண்ணி, "சிவனடியாரே வணக்கம், வணக்கம்" என்று இருமுறை வணக்கம் செய்கின்றான்.

உடனே வண்ணார் பயந்து போனவனாய், மன்னர் தன்னை வணங்குவதா? எனப் பதற்றம் அடைந்தவராய் "அடியேன் அடிவண்ணான்" என்று நடுக்கத்தோடு கூறுகின்றார்.

அரசர் "அடியேன் அடிச்சேரன். திருநீறு பூசிய அடியாரை நினைவுபடுத்தினீர்கள், வருந்தாமல் செல்லும்" என்று வண்ணாரிடமும் வாஞ்சையாகப் பேசி அனுப்பி வைத்ததாகப் பெரிய புராணம் கூறுகின்றது.

இத்தகைய சமத்துவத்தைத்தான் நம்முடைய சமயங்கள் வலியுறுத்துகின்றன. "அன்பே சிவம்" என்பதுதான் நம்முடைய சைவ சமயம் உணர்த்தும் தத்துவம்.

**இராமானுஜரை** "மதப்புரட்சி செய்த மகான்" என்றே சரித்திரம் கொண்டாடுகின்றது.

திருவரங்கத்துத் திருக்கோயிலை நிர்வாகம் செய்து வந்த இராமானுஜர் திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூர் திருத்தலத்திற்கு ஒரு முறை அல்ல, இரு முறை அல்ல, பதினெட்டு முறை நடந்து சென்றார்.

எதற்காக? இறைவனுடைய திருநாம மந்திரத்தைத் தெரிந்து கொள்வதற்காக. 18-வது முறை திருக்கோட்டியூர் சலிப்பில்லாமல் நடந்து வந்த இராமானுஜருக்கு **திருக்கோட்டியூர் நம்பிகள்** மந்திர உபதேசம் செய்து வைத்தார்கள்.

"குருநாதராகிய என் மேல் ஆணை, நான் உபதேசித்த மந்திரத்தை நீ வேறு யாருக்கும் உபதேசிக்கக் கூடாது" என்று சத்தியம் வாங்கிக் கொண்டார் திருக்கோட்டியூர் நம்பிகள்.

## ஸ்ரீரங்கத்தில் சொர்க்கவாசல் திறப்பு



22.12.2004 புதன்கிழமை காலை 5 மணி

மந்திர உபதேசமான பிறகு திருக்கோட்டியூர் பெருமாள் கோயிலுக்கு செல்கின்றார் இராமானுஜர், அட்டாங்க விமானத்தின் மேல் ஏறி நிற்கின்றார்.

"மக்களே! இங்கு எல்லோரும் வாருங்கள்! நான் சொல்லும் மந்திரத்தை கேளுங்கள். **ஓம் நமோ நாராயணா** என்னும் மந்திரம்.

"**நமோ நாராயணா**" என்னும் மந்திரத்தை "எல்லோரும் கேளுங்கள். மோட்சம் பெறலாம் கூறுங்கள்" என உபதேசம் செய்துவிடுகிறார்.

இராமானுஜரை தம் மடத்திற்கு வருமாறு கட்டளையிடுகிறார் திருக்கோட்டியூர் நம்பிகள்.

"நான் சொன்னது என்ன? நீர் செய்தது என்ன? ஒருவருக்கும் உபதேசிக்கக் கூடாது என்று நிபந்தனை விதித்தேன். ஆனால் எல்லோருக்கும் உபதேசித்துவீட்டீர், இதனால் உனக்கு என்ன கிடைக்கும் தெரியுமா?"

"குருவாணை மீறிய எனக்கு நரகமே கிடைக்கும்."

"நரகம் கிடைக்கும் என தெரிந்துமா மந்திர உபதேசத்தை எல்லோருக்கும் கூறினீர்கள்?"

"ஆம் சுவாமி நான் ஒருவன் நரகம் செல்வேன், ஆனால் இம்மந்திரத்தைக் கேட்ட, சொன்ன எல்லோரும் சொர்க்கம் போவார்கள். ஆனால், நான் ஒருவன் நரகம் போனால் என்ன சுவாமி? ஆகவே தான் எல்லோரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே என எல்லோருக்குமாக மந்திர உபதேசம் செய்து விட்டேன் சுவாமி" என்று விளக்கினார் இராமானுஜர்.

இராமானுஜருடைய விளக்கம், அவருடைய குருநாதரையே வியக்க வைக்கிறது. இராமானுஜரை ஓடிவந்து கட்டிப் பிடித்துக் கொள்கிறார்.

"நீர் எம்பெருமானார் என இன்று முதல் அழைக்கப்படுவீர்கள்" என இராமானுஜருக்கு "எம்பெருமானார்" எனப் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கின்றார். ★

கேரள மாநிலத்தின் புகழ்மிக்க திருத்தலங்களுள் ஒன்று சபரிமலை. சபரி மலைக்கு மகர சங்கராந்தி ஜோதி தரிசனம் என்பது பிரபலமானது. அடர்ந்த காட்டில் சபரிமலை யாத்திரை செல்வதற்கும் ஐயப்பனை தரிசனம் செய்வதற்கும் சில விவரங்கள் அதிசயத் தக்க வகையில் உள்ளன.

சபரிமலைக்கு ஆன்மீக யாத்திரை செல்பவர்கள் வழிகாட்டி அழைத்துச் செல்ல ஒரு வழிகாட்டி



நிர்மால்யராக அடைகின்றனர். திரும்பும்போது சமர்ப்பிக்கப்பட்ட அருட்பிரசாதத்துடன் திரும்புகின்றனர்.

சன்னதி அடைந்தவர்கள் கீழிருந்து தேங்காய் நெய்யை நிரப்பி இட்டுக் செல்லுகின்றனர். மனிதனின் முக்கண்களில் அகக்கண்ணைத் திறந்து பக்தி என்ற நெய்யை வார்த்து பூரணஞானம் பெற்றவராக இறைவனிடம் சேருகிறார்கள் என்ற தத்துவார்த்த விளக்கமே தேங்காயில்

# சுவாமி ஐயப்பன் தரிசனம்

**- இரா. மணிகண்டன்**

தேவை என்பதனால், ஒரு குருவை தங்கள் வழிகாட்டியாக வரித்துக் கொள்ளுகிறார்கள். அவர் மூலம் கார்த்திகை மாதம் முதல் தேதி மாலையிட்டு 48 நாட்கள் விரதமிருந்து பெரிய பாதை அல்லது சிறிய பாதை என்னும் வழியாக அவர் வழிகாட்டி அழைத்துச் செல்லும்முறையில் சென்று தரிசனம் செய்து திரும்புகிறார்கள். மாலையிட்டு அழைத்துச் செல்லும் அவர்களை மரியாதையுடன் 'குருசாமி' என அழைக்கின்றார்கள்.

கார்த்திகை மாதம் விரதம் இருந்து மகர சங்கராந்தியில் தரிசனம் செய்வது என்று இருந்தது, தற்போது பயண நாட்களும், வழிகளும், உபகரணங்களும் சுருங்கிவிட்டதால் வருடந்தோறும் மாலையிட்டுப் பூஜைநடக்கும் மாத நாட்களில் சென்று வருவதைப் பழக்கமாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

மற்ற நாட்களில் எப்படி இருந்தாலும் மாலை போட்ட பிறகாவது மனித நேயத்துடன் செயல்பட வேண்டும் என்னும் நோக்கில் அனைத்து மனிதர்களையும் 'ஐயப்பா' என்று அழைப்பதும், மாலை போட்டுக் கொண்டவர்கள் சாதாரண மனித நிலையில் இருந்து பக்குவப்பட்டு மேலே உயர வேண்டும் என்பதனால் அவரை 'சாமி'- 'சாமி' என அழைத்து உயர்நிலைக்குக் கொண்டு செல்லுகிறார்கள்.

யாத்திரை செல்லும் போது இறைவனுக்கு நேரிடையாக சமர்ப்பிக்கப்படும் பொருட்களை ஒரு முடியாகவும், யாத்திரை செல்பவர் பயன்பாட்டுக்காக எடுத்துச் செல்லும் பொருளை ஒரு முடியாகவும் கொண்டு 'இருமுடி கட்டுதல்' என்ற நிகழ்ச்சி கொண்டாடப்படுகிறது. இருமுடியில் முன் முடியாக இறைவனுக்குக் கொண்டு செல்லப்படும் பொருட்கள் வைக்கப்பட்டும், மலை ஏறும்போது பின் முடியில் உள்ள பொருட்கள் குறைந்து இறைவனை சமீபிக்கும்போது அனைத்து சுமைகளும் நீங்கி

நெய் நிரப்பி எடுத்துச் செல்வதன் தத்துவம் ஆகும்.

ஐயப்பன் சன்னதி செல்வதற்கு முன் 18 படிகளை ஏறிச்செல்ல வேண்டும் எனவும், அந்தப் படிகளுக்கு பூசை செய்ய வேண்டும் என்பதும் உள்ள பழக்கமாகும். அந்தப் பதினெட்டுப் படிகளும் பதினெண் சித்தர் என்றும், பதினெண் தேவதைகள் எனவும் கூறுவது உண்டு. அவர்களுக்குப் பூஜை செய்து ஐயப்பனை தரிசிப்பது என்பது ஒரு முறை எனவும் குறிப்பர்.

தத்துவார்த்தமாக பஞ்சேந்திரியங்கள்-5, எட்டு ராகங்கள், முக்குணங்கள், வித்தை அவித்தை ஆகியவற்றைக் கடந்து சென்று அல்லது அங்கேயே அவற்றையும் அவற்றால் உண்டாகும் சிற்றின்பங்களையும் நீக்கி ஐயப்பனைச் சென்று வணங்க வேண்டும் என்பது ஆகும் எனச் சொல்லுவோரும் உண்டு.

ஐயப்பனின் சக்திகள் பூரணை புஷ்கலை என்பவைகள் இச்சா கிரியா சக்திகள் ஆகும். அவற்றை இரண்டையும் பெண் வடிவாக்கி வழிபடுவதையே 'பூரண புஷ்கலா நாதா ஐயப்பா' என்று அழைக்கின்றனர். ஆனால் அவரைக்காட்டில் நின்று காவல் காக்கும் பிரம்மச்சரிய கடவுளாகவே கருதும் பழக்கம் வழக்கத்தில் உள்ளது. மகர சங்கராந்தியில் ஜோதி தரிசனம் காண்பது என்பது ஒரு வழக்கமாக உள்ளது.

மூலவிக்கிரகம் ஐயப்பன் அமர்ந்த திருக்கோலத்தில் ஒரு கையில் சின்முத்திரையுடன் யோக பட்டம் கட்டிய நிலையில் பத்ம பீடத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி தருகிறார். அவரே அருவ நிலையில் ஜோதி வடிவில் காட்சி தருகிறார் என்பதை உணர்த்தவே ஜோதி தரிசனம் என்பது வழக்கத்தில் உள்ளது.

★

# பதில்



★. அமிர்தவல்லி, திருவொற்றியூர்.

**கேள்வி:** திருவிளக்கு வழிபாட்டின் தத்துவம் என்ன?

**பதில்:** இறைவன் ஒளிவடிவானவன் . 'அருட்பெருஞ்ஜோதி ' 'பரஞ்ஜோதி' 'ஒளிவளர்விளக்கு' என்றெல்லாம் இறைவனை ஒளிமயமாகக் காட்டு கின்றனர். இறைவனைத் திருவிளக்கின் வடிவில் கண்டு வழிபடுவதே திரு விளக்கு வழிபாட்டின் தத்துவம் ஆகும்.

★ குமுதா, திருச்சி.

**கேள்வி :** ஏகாதசி விரதம் எப்படி இருக்க வேண்டும்?

**பதில் :** விரதங்களில் சிறந்த ஏகாதசி விரதத்தைத் தசமியன்று பிற்பகலில் இருந்தே தொடங்கி விட வேண்டும்.

ஏகாதசி அன்று துளசி இலை பறிக்கக் கூடாது. ஆகையால் தசமி அன்றே பறித்து வைத்துக் கொள்ள வோண்டும். திருமாலின் துவாதச நாமம் கூறி அன்னம் அருந்தாமலும், உறக்கம் கொள்ளாமலும் 36 மணி நேரம் விரதம் இருக்க வேண்டும். துவாதசி அன்று காலை திருமாலை வழிபாடுசெய்து துளசிதீர்த்தம் அருந்தி, உணவருந்த வேண்டும். இவ்வாறு சிரத்தையுடன் விரதம் இருந்தால் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வைகுண்டப் பதவி பெறலாம்.

★ திருநாவுக்கரசு. சேலம்.

**கேள்வி :** 'திருவாதிரைக்களி ' என்றால் என்ன?

**பதில் :** சேந்தனார் என்பவர் சிறந்த சிவபக்தர். தில்லைநடராசர் மேல் பெரும்பக்தி பூண்டவர். இவர் விறகுவெட்டி விற்றுப் பிழைத்து வந்தார். தமக்குக் கிடைத்த சிறு வருவாயிலும் கூட நாளும் சிவபெருமானுக்கு அமுதுபடைத்து, அவ்வமுதை அடியார்க்கும் கொடுத்த பிறகே தாம் உண்டு வாழ்ந்து வந்தார்.

இவருடைய பக்தியை உலகிற்கு உணர்த்தத் திருவுளம் கொண்டார் தில்லை நடராசர், அடியவரைப் போல் வேடம் புண்டு சேந்தனார் இல்லம் சென்று தம் பசிக்கு உணவு தருமாறு வேண்டினார். சேந்தனாரிடம் அன்று இருந்தது களிஉணவு மட்டுமே. பக்தியுடன் அடியவருக்குப் படைத்து மகிழ்ந்தார். அன்று திருவாதிரை. திருவாதிரையில் நடராசருக்குச் சேந்தனார் படைத்த களியமுது இனிய பிரசாதமாயிற்று.

★ பிரசன்னா இராஜமாணிக்கம், கோயம்புத்தூர்

**கேள்வி :** கொடிமரத்தின் தத்துவம் யாது?

**பதில் :** கொடிமரம், யோகியானவன், பிராணவாயுவை நடுநாடியாகிய ஸுஷும்சையில் அசைவற்று நிறுத்திக் கொண்டு தியானிக்கில் மனம் முதலிய கரணங்கள் யாவும் நின்று பிரபஞ்சமே தோன்றாது சிவதரிசனம் உண்டாகும் என்னும் உண்மையை அறிவிக்கின்றது.

★ தேவதாஸ், மதுக்கூர்

**கேள்வி :** சிவலிங்கம் திரிமூர்த்திசொரூபம் என்பது ஏன்?

**பதில் :** ரூபாரூப மூர்த்தியாகிய பின்னரே இறைவன் அனைத்தையும் படைத்து அளித்து அழிக்கும் மும்மூர்த்திகள் ஆயினமையால் சிவலிங்கம் திரிமூர்த்தி சொரூபமாயிருக்கிறது. ஆவுடையாரில் பிரம்ம விஷ்ணுக்களும், பாணத்தில் சிவனும் அடக்கம் என்பார்கள்.

★ மணிகண்டன், காரையார்

**கேள்வி :** கர்ப்பக் கிரகம் என்பது யாது?

**பதில் :** கர்ப்பக் கிரகம் என்பது பிரதான மூர்த்தியை வைத்து வணங்கப்படும் இடம். இதற்கு உண்மை எல்லா உலகங்களையும் படைத்ததற்குக் காரணமான மூலப்பிரகிருதியின் இடம் என்பதாம். கடவுள் உலகைப் படைக்க நினைத்த காலத்து அவரது அருட்சக்தியை மாயையிடத்தே அதிட்டிக்கச் செய்கிறார் என்பது கருத்து.

சந்திரன் மரபின் மாணிக்க விளக்காகிய தடாதகைப் பிராட்டியாரை, சுந்தர பாண்டியராய் இறைவர் வந்து திருமணம் செய்து கொண்ட பின்பு திருமணத்திற்கு வந்திருந்த அரசர்களையும், தேவர்களையும், முனிவர்களையும் 'அமுதுண்ண வாருங்கள்' என்று திருவாய் மலர்ந்தருளினார். அவர்கள் விரைந்து சென்று பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடித் தங்கள் நியமங்களை முடித்து வந்தனர்.

அப்பொழுது பதஞ்சலி முனிவரும், வியாக்கிரபாதரும் இறைவனை விழுந்து வணங்கி நின்று, "இறைவா! பொன்னம்பலத்திலே ஆடியருளும் தேவரீரது திருநடனத்தைத் தரிசித்த பின்னரே உண்பது எங்களுக்கு நியமம்" என்று கூறினர்.

உடனே சிவபெருமான் அவர்களை நோக்கி "அந்நடனத்தினை இம்மதுரைப் பதியில் யாம் செய்து காட்டுவோம்" என்றார். உடனே இந்திரவிமானத்தின் கீழ்ப்புறம் வெள்ளியம்பலம் ஒன்று தோன்றியது. அதனிடத்தே ஒரு மாணிக்கபீடமும் தோன்றியது. அம்மாணிக்க பீடத்தின் மேல் இறைவர் திருநடனம் செய்தருளினார்.



திருமால் இசைக் கருவியை வாசித்தார். நந்திதேவர் மத்தளம் அடித்தார். தும்புரு நாரதர் இருவரும் இசை பாடினர். நான்முகன் யாழ் கொண்டு சாமகீதம் பாடினார். இவ்வாறு இவர் வெள்ளியம்பலத்துள் திருக் கூத்தாடிய காட்சியை முனிவர் இருவரும் கண்டு ஆனந்தப் பெருக்கில் மூழ்கினர்.

பின்னர் வெள்ளியம்பலத்துள் நின்று கூத்தாடும் இறைவர் முனிவர்களை நோக்கி 'நன்று நீங்கள் விரும்பியது யாது?' என்று கேட்டார். உடனே முனிவர்கள் வணங்கி "எந்தையே இத்திருக்கூத்துடன் எப்பொழுதும் வெள்ளியம்பலத்துள் நின்று அருள் புரிய வேண்டும்" என்று வேண்டினர். சிவபெருமான் அவர்களை நோக்கி, "இப்பாண்டி நாடு செய்த தவம் காரணமாக நீங்கள் விரும்பிய வரத்தை அளித்தோம்" என்று அருள் செய்தார்.

உடனே பதஞ்சலி முனிவர் சிவபெருமானை நோக்கி "இத்திருக்கூத்தை நேரே தரிசித்தவர் அனைவரும் இப்பூமியில் மீண்டும் பிறவாத சிவகதியை அடைதல் வேண்டும்" என்று கூறி வணங்கினார். சிவபெருமான் அதற்கு இணங்கி அவ்வாறே அருள் புரிந்தார். அதனைக் கேட்டுச் சிவகணத்தவர் ஆரவாரம் செய்து குரவைக் கூத்தாடினர். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். முனிவர்கள் ஆனந்தம் அடைந்தனர்.

தடாதகைப் பிராட்டியாரின் திருமணத்தின் பொருட்டு வந்திருந்த அரசர், வேதியர், முனிவர் ஆகிய அனைவரும் அறுசுவையுடன் கூடிய உணவை உண்டனர். பின்னர் அவர்கள் விடைபெற்றுச் சென்றனர். பின்னர் மடைத் தொழிலாளர்கள் பிராட்டியாரிடம் சென்று வணங்கி, "நாங்கள் சமைத்த உணவில் ஆயிரத்தில் ஒரு பங்கேனும் செலவழியவில்லை. இனி செய்யத் தக்கது யாது? என்று கேட்டனர்.

உடனே தடாதகைப்பிராட்டியார் தம் கணவராகிய சுந்தரபாண்டியரைச் சென்று வணங்கி "தேவரீர்! தேவர்கள் பொருட்டு அளவின்றிச் சமைக்கப்பட்ட உணவு வீணாக மலைபோல் உலர்கின்றது" என்றார். உடனே சோமசுந்தரப் பெருமான் ஒரு விளையாடலைச் செய்யக் கருதி, புன்னகை புரிந்து "நீ மலயத்துவச பாண்டியனின்

- இரா. அரங்கசாமி

# திருவிளையாடல் புராணம்

## திருப்தி செய்ய வேண்டியது...

*வேதத்தினால் ரிஷிகளையும், ஹோமத்தினால் தேவர்களையும், சிரார்த்தத்தினால் பிதுர்க்களையும். அன்னத்தினால் அதிதிகளையும், உழைப்பினால் தன் எஜமானனையும், தரிசனத்தால் தெய்வங்களையும், பிரியத்தால் பெற்றோர்களையும், அன்பால் மனைவியையும், கண்டிப்புடன் கூடிய பாசத்தால் பிள்ளைகளையும் திருப்தி செய்ய வேண்டியது தர்மமாகும்.*

திருமகள் அன்றோ! நின் செல்வப் பெருக்கை நான் அறியும் வண்ணம் அளவின்றி மலைபோல் அன்னத்தைச் சமைத்தாய் போலும்! எம் கணங்களுள் பசிமிக்கவர் யாரும் இல்லை" என்றார்.

அதே நேரத்தில் அருகில் நின்ற குண்டோதரன் என்னும் பூதகணத்தின் வயிற்றில் வடவைத் தீ வந்து புகுமாறு திருவுளம் கொண்டார். உடனே வடவைத்தீ குண்டோதரன் வயிற்றில் வந்து புகுந்து பசியாய் மூண்டெழுந்தது. அவன் உடல் தளர்ந்து வருந்தி உயிர் ஒடுங்கிச் சிவபெருமானை நோக்கி "எம் பெருமானே! பசியால் வருந்துகிறேன்!" என்று கூறினான்.

உடனே சிவபெருமான் "எம் குடையைத் தாங்கிவரும் இக்குறுங்கால் பூதத்திற்கும் ஒரு பிடி சோறு அளிப்பாயாக! பின்னர்க் கூறுவோம்" என்று கூறியருளினார்.

தடாதகைப்பிராட்டியார் பெருமானை வணங்கிச் சென்றார். குண்டோதரன் பிராட்டியாரைத் தொடர்ந்து சென்றான். பிராட்டியாரின் ஏவலினால் அவனை அழைத்துக் கொண்டு போய்ச் சோற்றின் முன் விட்டனர். அவ்வாறு அழைத்துச் சென்ற பெண்கள் குண்டோதரன் அன்னத்தின் முன் இருந்ததை மட்டுமே கண்டனர். அவன் சோற்றை எடுத்து உண்டதையும் அங்கிருந்த சோற்றையும் கண்டிலர். ஒரு நொடியில் அனைத்தையும் விழுங்கிவிட்டான். அதைக் கண்ட பெண்கள் பயந்து கைநெரிந்துக் கண்களை மூடிக்கொண்டு ஓடிவிட்டனர்.

சமைக்காத அரிசி, கறி, துவையல், பால், தயிர், நெய், தேன், பிற பண்டங்கள், பழங்கள், சர்க்கரை, தேங்காய், பணியாரம், பச்சைக் காய்கறிகள் யாவற்றையும் அவன் உண்டு தீர்த்தான். அவன் உண்ண உண்ண அவனது பசித்தீயானது மேலும் அதிகமானது. தடாதகைப் பிராட்டியார் அதனைக் கண்டு வியப்படைந்தார். சிவபெருமான் திருமுன்னர் சென்று வெட்கத்துடன் நின்றார். சிவபெருமான் அந்நிலையை ஒன்றும் அறியாதவர் போலப் பிராட்டியாரை நோக்கி, "அக்குண்டோதரன் உண்ட உண்வு எஞ்சியிருக்குமாயின் இன்னும் பற பூதகணங்களை அனுப்பி உண்ணச் செய்து உன்னை மகிழ்விக்கிறேன்" என்றார்.

அதுகேட்ட பிராட்டியார் "ஐயனே! இன்னும் குண்டோதரன் பசி அடங்கவில்லை. வேறு பூதகண வீரரை அனுப்புவீராயின் அவர் சென்று உலகம் முழுவதையும் எடுத்து உண்டு விடுவர். அதனால் உமக்குக் கால உருத்திரர் என்னும் திருநாமம் உறுதியாகும். குண்டோதரன் தன் செயலைத் தானே இங்குவந்து விண்ணப்பம் செய்ய நீர் அறிந்து கொள்வீர்!" என்று பணிவுடன் கூறினார்.

அப்போது பசித்தீ சுட குண்டோதரன் அங்கு வந்து "சுந்தரபாண்டியரே! எம்பிராட்டியார் சமைத்த மலைபோன்ற உணவை உண்டபின்னும் என் கடும்பசி தணியவில்லை" என்று கூறினான். "ஐயகோ!" என்பான். பெருமூச்செறிவான், ஆவி சோர்ந்து அயருவான்.

சோமசுந்தரக் கடவுள் குண்டோதரன் பொருட்டுத் தன் சக்தியாகிய அன்னபூரணியை நினைத்தார். உடனே நான்கு குழிகளில் தயிர் கலந்த அன்னம் பொங்கி எழுந்தது. உடனே சுந்தரபாண்டியர் குண்டோதரனைப் பார்த்து "உன் பசி நீங்குமாறு உண்பாய்" என்று கட்டளை இட்டார்.

தொடரும்...

நன்றி : இராமலிங்கர் பணிமன்றம், சென்னை.

## கோ பூஜை

*பசுவின் பின்பாகத்துக்குப் பூஜை செய்கிறார்கள். கோயிலில் விஸ்வரூபதரிசனத்தின்போது பகவானுக்கு எதிரில் பசுவைப் பின்புறமாகத் திருப்பி நிறுத்தி வைக்கிறார்கள். பசுவின் பின் பக்கத்தில் மகாலட்சுமி வாசம் செய்கிறாள் என்பது ஐதீகம். மேலும் 'பசு' என்னும் இரண்டெழுத்தைத் திருப்பி எழுதுங்கள், 'சுப'மாகி விட வில்லையா! ஆகையால், பசுவைத் திருப்பி நிறுத்திப் பின் பாகத்துக்குப் பூஜை செய்து சுபத்தை அடைகிறோம்.*

இராமானுஜரின் வடிவழகில் மயங்கிய டில்லி பாதுஷா, "கேட்கலாம், எதுவானாலும்" என்றான். டில்லி பாதுஷா, அவனா பேசினான்? இல்லை, இல்லை, அவனைப் பேச வைத்தவன், அந்த அரண்மனையின் அந்தப்புரத்தினுள், அரச குமாரியின் அந்தரங்க அறையினுள் எழுந்தருளியிருந்த அந்தப் பிரபு அல்லவா!

வாய் திறந்து பேசினார். வையகத்தை வாழ்விக்க வந்த அம்மகான்.

"எங்கள் பெருமான் ஸ்ரீராம அப்ரமேயன் (ஈடில்லாத அழகன்) உங்களிடம் இருக்கிறார். அழைத்துப்போக வந்துள்ளேன். அனுமதி தாருங்கள்...." என்றார். தனது செல்வத்தைத் திரும்பப் பெறுவதற்காக, அனுமதியா? ஆனால் அந்த மகாபுருஷர் அனுமதி கேட்ட காரணம், அந்த இளவரசி ஆறாத பிரேமையுடன், அந்த அரங்க விக்கிரகத்தைப் போற்றி, பூஜித்து தன்னுடன் ஆசையுடன் பாதுகாத்து வைத்துக் கொண்டிருந்ததால்.

"உங்கள் தெய்வம் அது என்றால் கூப்பிடுங்களேன்! வந்தால், தாராளமாக அழைத்துச் செல்லலாம்"... பாதுஷா கூறினான், சிறிது கேலி கலந்த வியப்புடன்.



உடையவர் உள்ளத்தில் பேரானந்தம். வாக்கு கொடுத்து விட்டார் பாதுஷா! இனி வெற்றிதான்.

உடலும், உள்ளமும்




ஜோதிட சக்கரவர்த்தி
**ஏ.எம். இராஜகோபாலன்**


சனகாதி மகரிஷிகள் எல்லாம், எவனது திவ்ய சரணார விந்தத்தை ஒரு வினாடி காண்பதற்காக கல்பகோடி காலம், அக்கினியின் மத்தியில் நின்று தவமியற்றுகிறார்களோ, அந்த சர்வலோக சரண்யன், தன் மடியில் ஓடி வந்து அமர்ந்தபேரானந்தத்தில், ஒரு கணம் தன்னையே மறந்த நிலையில் அமர்ந்திருந்தார், அடைய முடியாததை அடைந்து விட்ட பெருமையில்.

சில வினாடிகளில், தன் சுய நினைவு பெற்றார் எதிராசர். கால தாமதம் செய்தால் எதுவும் நேரலாம் என்ற நிலை. அந்த விக்கிரகத்தை வாரி அணைத்து, முத்தமிட்டு, உச்சி மோந்து, "என் செல்வப் பிள்ளையே! சம்பத் குமாரா!! என் கண்ணே!" என்று, ஒரு வினாடி அந்த கண்ணனுக்குத் தாய் யசோதையாகவே ஆகிவிட்டார் அம்மஹான்.

அடுத்தகணம் தன் நிலையை உணர்ந்தார். பாதுஷாவிடம் விடைபெற்று, விரைவாகப் புறப்பட்டார். திருநாராயணபுரம் நோக்கி.

இதற்கிடையில், தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்த அழகிய விக்கிரகத்தைக் காணாமல்

# எம்பெருமான் எனும் பெருஞ்செல்வத்தை மீட்டு அளித்த எம்பெருமானார்!

நடுங்கியது உடையவருக்கு. நா தழு தழுத்தது. "என் கண்ணே! என் ஆருயிர்ச் செல்வனே!! எங்கள் பிறவியின் இன்னமுதே!! இருந்தது போதும் வந்துவிடு எங்களிடம்..." என்று கண்ணீர் மல்க அழைத்தார். அடுத்த வினாடி என்ன நடக்கப் போகிறது என்று வியப்புடன், அந்த மகா மண்டபமே நிசப்தமாக காத்திருந்தது.

**உடையவர்** கூப்பிடும் போது, அண்டசராசரங்கள் அனைத்தையும் **உடையவன்** காத்திருப்பானோ?

அந்த வினாடியே, அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது.

காண்பது கனவா? அல்லது நனவா? அல்லது கற்பனையா? மாயமா? அல்லது மந்திரமா? அல்லது சித்து வித்தையா?

அவை எதுவும் இல்லை!.

உடையவரின் உள்ளத்தில் இருந்த பக்தி தான் அது!!

"ஸ்ரீராமப்பிரியன்" என்ற அந்த விக்கிரகம், தன் திருவடிகளால் ஓடி வந்து, ஸ்ரீமத் ராமாநுஜரின் மடிமேல் அமர்ந்தது. உடையவருக்கு உடலெல்லாம் வியர்த்துப் பொங்கியது.

துடிதுடித்துப் போனார் இளவரசி. ஒரு சில வீரர்களுடன், ஸ்ரீமத் ராமாநுஜர் சென்ற திக்கை நோக்கி விரைந்தாள் அப்புனிதவதி.

உடையவர் திருவரங்கத்திற்குத் தான் சென்றிருக்க வேண்டும் என்று நினைத்து, அரங்கநகர் நோக்கி வந்த அம்மகா பக்தை உறையூர் வந்தடைந்ததும், ராமப்பிரியனைப் பிரிந்த தாபம் தாங்காமல், அரங்கனின் திருவடிகளில் ஐக்கியமாகி விட்டாள்.

அவள் செய்த பாக்கியம் தான் என்னே!

சுமார் பன்னிரெண்டு ஆண்டுகள் திருநாராயணபுரத்தில் எம்பெருமானுக்கு நித்திய கைங்கர்யம் செய்து வந்த எம்பெருமானார், தாம் வைணவத்திற்கு ஆற்ற வேண்டிய பணிபாக்கி இருப்பதைத் தம் சீடர்களுக்கு நினைவுபடுத்தி அவர்களிடம் பிரியா விடைபெற்றார்.

தம் பிரிவினால், சீடர்கள் மனம் வருந்தாமல் இருக்க தன்னைப் போன்ற திருமேனி ஒன்றை வடிக்கச் செய்து, அதனை ஆலிங்கனம் செய்து, தன் திவ்ய சக்தியை அதனுள் செலுத்தினார். சீடர்களும்



அருள்மிகு பார்த்தசாரதி சுவாமி திருக்கோயில்





புதுப்பிக்கப்பட்ட திருத்தேர் வெள்ளோட்டம் 4.11.2004 வியாழக்கிழமை சிறப்பாக நடைபெற்றது.



மகிழ்ந்தனர். இதுவே **தமர் (சீடர்கள்) உகந்த திருமேனி** என தெய்வீகப் புகழ் பெற்றது.

எதிராச எம்பெருமானார் திருவரங்கம் திரும்பிவிட்டார் என்பதைக் கேட்ட வைணவ உலகம் மீண்டும் நம்பிக்கையும், புத்துயிரும் பெற்றது.

"கங்கையின் புனிதமாய காவிரி"யில் புனித நீராடி அழகிய மணவாளனையும் சேவித்து, "கண்டேன், கண்டேன், என் கண்ணின் கரு மணியைக் கார்முகில் வண்ணனைக் கண்டேன்" என்று ஆனந்தப்பட்டார். "எத்தனை ஆண்டுகள் என் அப்பனைப் பிரிந்திருந்தேன்" என்று கண்கலங்கி நின்றார் அரங்கன் முன்னால்.

ஆஸ்ரமம் திரும்பிய எதிராசரின் கண்கள் எவரையோ தேடின! அவர்தான், விதி விளையாடிய அந்த மறக்க முடியாத இரவில், திருவரங்க திருத்தலத்தில், ஸ்ரீமத் ராமாநுஜரை வைணவ தர்சனத்திற்காகக் காப்பாற்றிய கூரத்தாழ்வான்.

ஆழ்வானின் கண்கள் பிடுங்கப்பட்டதை அறிந்து தம்மை அறியாமலேயே கண்ணீர் உகுத்தார் ஸ்ரீமத் ராமாநுஜர்.

பாரத தர்மத்தின் சரித்திரத்தில் ஸ்ரீமத் ராமாநுஜர், ஸ்ரீ வைணவ தர்மத்திற்காக செய்துள்ள தியாகங்களும், பட்ட துன்பங்களும், பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டவை ஆகும்.

எம்பெருமானுக்கு ஆயிரம் நாமங்கள், எம்பெருமானாருக்கோ, ஆறு, அரிய, தெய்வீக பட்டப் பெயர்கள் அளிக்கப்பட்டு கவுரவப்படுத்தப்பட்டார். அவை : -

பட்டப் பெயர்

1. உடையவர் - அரங்கத்து இன் அமுதனான அழகிய மணவாளன்
2. எதிராஜர் - காஞ்சி ஸ்ரீதேவப் பெருமாள்
3. கோயிலண்ணன் - ஸ்ரீ ஆண்டாள்
4. பாஷ்யகாரர் - சாரதா பீடத்தில் சரஸ்வதி தேவி ஸ்ரீ ஹயக்ரீவர் விக்ரகத்துடன் அளித்தருளியது.
5. எம்பெருமானார் - திருக்கோட்டியூர் நம்பிகள்
6. ராமாநுஜன் - திருமலை நம்பிகள்

"வைணவத்தில் பேதம் கிடையாது, நாரணன் முன்பு அனைவரும் சமமே", என்று உபதேசித்தருளிய இம்மகான் வைணவத் திருக்கோயில்களின் அன்றாட நிர்வாகம், உற்சவ நெறிமுறைகள் ஆகியவற்றை நிர்ணயம் செய்தார். 120 ஆண்டுகள் வைணவத்திற்காகவும், எளியவர்களுக்காகவுமே உழைத்த இம்மகாபுருஷர், தம் ஜீவித காலம் எப்போது முடியப் போகிறது என்பதையும் முன் கூட்டியே தமது ஆத்ம சக்தியினால் அறிந்திருந்தார்.

இருப்பினும், அவர் முக்தியை விரும்பவில்லை. பரமபதத்தை நாடவில்லை. கலியில் கஷ்டப்படும் மக்களுக்காக துணையிருக்கவே விரும்பினார். நமக்காக, பேரின்பம் பெருவீடான ஸ்ரீ வைகுண்டத்தையே தியாகம் செய்தவர் ஸ்ரீமத்ராமாநுஜர்.

அவரது திருவுள்ளப்படி, அவரது பிராணஜீவன் மந்திர சக்தியினால், ஸ்ரீ பெரும்புதூரில் அவரது ஜீவித காலத்திலேயே வடிக்கப்பட்ட, அதியற்புத விக்கிரக திருமேனிக்கு மாற்றப்பட்டது. ஆதலால், அது ஜீவசக்தி பொருந்திய **தாமுகந்த திருமேனியாக** மாறியது.

அவரது திவ்ய திருமேனி, அரங்கனின் திருக்கோயில் வளாகத்தில் பள்ளிப் படுத்தப்பட்டது. ஆனால் சில நாட்களிலேயே மேலே வந்து அமர்ந்த திருக்கோலத்தில் இன்றும் ஸேவை சாதித்து நம்மைக் காத்து வருகிறார் இம்மகா புருஷர். இதுவே **தாமான திருமேனி** எனப் புகழ்பெற்றது. இவரது திருவடிகளைப் பற்றி, துயர் தீர்ந்து வருபவர் ஏராளம், ஏராளம்.

இன்றும், என்றும், நம்முடன் இருந்து நமக்குத் துணைபுரியும் இம்மகானுக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும்?.

"சீராரும் எதிராசன் திருவடிகள் வாழி!
திருவரையில் சார்த்திய செந்துவராடை வாழி!
ஏராரும் செய்யவடி எப்பொழுதும் வாழி!
இலங்கிய முந்நூல் வாழி! - இணை தோள்கள் வாழி!
சேராததுய்ய செய்யமுகச் சோதி வாழி!
தூமுறுவல் வாழி துணை மலர் கண்வாழி!
ஈராறு திருநாமம் அணிந்த எழில் வாழி!
இனிதிருப்போடு எழில் ஞான முத்திரைவாழி! ★

**வரும் புத்தாண்டு (2005) ஜனவரி இதழில் 'ஜோதிட சக்கரவர்த்தி' ஏ.எம்.ஆர். அவர்களின் "கடமை தவறா கருநிறத்தான்" புதிய கட்டுரைத் தொடர் தொடங்க உள்ளது. ஆவலுடன் எதிர்பாருங்கள்!**

காலச்சுவடுகள்

# இராபர்ட் கிளைவ் அளித்த மகர கண்டி



ஆங்கிலேய ஏகாதிபத்யம் இந்தியாவில் வேரூன்றக் காரணமானவர் இராபர்ட் கிளைவ் என்னும் ஆங்கிலேயர் ஆவார். இவர் 1751 ம் ஆண்டு ஆற்காடு படையெடுப்பிற்கு முன்பாக இத்திருக்கோயில் வளாகத்தில் அமைந்துள்ள தென்னந்தோப்பில் தங்கினார்.

இராபர்ட் கிளைவ் இங்கு தங்கிய போது ஸ்ரீ வரதராஜபெருமாள் மகிமைகளை ஆலயத்தார் விளக்கக் கேட்டு அதற்கு மறுமொழியளிக்கும் விதமாக நான் இப்போது மேற்கொண்டுள்ள படையெடுப்பில் வெற்றிபெற்றால் எதை முதன்முதலில் காண்கிறேனோ அதை இந்த பெருமாளுக்குக் காணிக்கையாக்குகிறேன் என்றார்.

ஆற்காடு படையெடுப்பில் வெற்றி கண்ட இராபர்ட் கிளைவ் தான் முதல் முதலில் கண்டெடுத்த விலையுயர்ந்த கற்கள் அமைந்த தங்கத்தாலான ஒரு நகையை ஸ்ரீ வரதராஜபெருமாளுக்குக் காணிக்கையாக்கினார். அந்த நகை கிளைவ் மகர கண்டி என வழங்கப்பட்டு தற்போதும் விசேஷ உற்சவங்களில் ஸ்ரீ சுவாமிக்கு அணிவிக்கப்படுகிறது.

# கலெக்டர் கேரோ தந்த தந்தக் கட்டில்



1802 ஆம் ஆண்டு, பவானியில் கலெக்டராய் இருந்தவர் வில்லியம் கேரோ என்கிற ஆங்கிலேயர்.

அந்தக் காலத்தில் கலெக்டரின் ஜாகையாக ஒரு பங்களா, கோயிலை ஒட்டி அமைந்திருந்தது. (இப்போது அந்தப் பங்களா பயணிகள் விடுதியாய் இருக்கிறது.)

கலெக்டர் கேரோவுக்குத் தம்மையும் அறியாமல் அம்பிகை வேதநாயகி மீது ஓர் ஈடுபாடு ஏற்பட்டது .

அம்மனைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆசை அவரது மனத்துக்குள் எழுந்தது.

கோயிலின் மதில் சுவரில் மூன்று துவாரங்கள் செய்யப்பட்டன.

கோயிலுக்கு வெளியிலிருந்து அந்த துவாரங்கள் வழியாகப் பார்த்தால் அம்பிகையின் வடிவழகைத் தரிசித்து வழிபட முடியும்.

அந்த துவாரங்கள் வழியே நாளும் அம்பிகையைத் தரிசித்து மகிழ்ந்தார் கலெக்டர் கேரோ.

ஒரு நாள் இரவு, தமது பங்களாவில் தூங்கிக் கொண்டிருந்த கேரோ ஒரு கனவு கண்டார்.

அம்மனைப் போல அலங்காரம் செய்து கொண்டு ஒரு பெண் உடனே "இந்த வீட்டிலிருந்து வெளியே போ" என்று கலெக்டரை நோக்கி கூறுவதாக அமைந்திருந்தது அந்தக் கனவு.

கலெக்டர் கேரோ வெளியில் வந்த சில நிமிடங்களில் அவர் தங்கியிருந்த பங்களாவின் கூரை அவர் கண்ணெதிரிலேயே இடிந்து நொறுங்கிக் கீழே விழுந்தது. அம்பிகையே தம்மைக் கனவில் எச்சரித்துக் காப்பாற்றி விட்டதாய்க் கருதிய கலெக்டர், அம்பிகைக்குத் தம் காணிக்கையாகத் தந்தத்தாலேயே செய்யப்பட்ட ஒரு பல்லக்கு ஊஞ்சல் வழங்கினார்.


சிறப்பாசிரியர் மற்றும் வெளியிடுவோர் : திருமிகு ஜி. இராமகிருஷ்ணன், இ.ஆ.ப., ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையஆட்சித்துறை, சென்னை - 600 034.தொலைபேசி : 28334811/12/13

ஆசிரியர் : கவிஞர் டாக்டர். த. அமிர்தலிங்கம், எம்.ஏ., பி.எச்.டி.,

அச்சிடுவோர் : இராயப்பேட்டை எழுதுபொருள் அச்சு மற்றும் உபபொருள்கள் உற்பத்தியாளர் தொழிற் கூட்டுறவு சங்கம் லிமிடெட். சென்னை-14. தொலைபேசி எண் : 28485670

# FOR PLEASANT STAY
## AT
## KANYAKUMARI



# SEA VIEW LODGE,

South Car Street, Kanyakumari - 629 702.
Ph : 04652-266353, 247333
Fax : 04652-246627

